# கல்கி

KALKI 14.3.2004 ரூ.6.00

"மழைநீரை சேமிப்பீர்"
பெரியகுளம் நகராட்சி
தங்களை அன்புடன்
வரவேற்கிறது







சிலிர்த்தது
கலிங்கப்பட்டி!

செல்லப் பிள்ளைகளின்
செல்லத் தொகுதிகள்!



தேர்தல்
ஸ்பெஷல் -2




உள்ளே...
டீனேஜ்
சவால்கள்!

மினி கல்கி




ஜமீந்தார் ஆகட்டும் இல்ல ஆஃபீசர்.
ஒவ்வொருவருடைய புத்தியையும்
கூர்மையாக்கிடும், பார்லே-ஜீ.



உலகின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட்டுகள்.






Visit: www.parleproducts.com

everest/2004/PP/3 tm



# வாஸந்தி

அமெரிக்க டயரிக் குறிப்பு



84

ஐயோ-டேட்டா!



81



பாகிஸ்தானில் தமிழ்ப் படம்!

24

தொங்குவது சுகமான சுகம்

20

கல்கி
14.3.2004

அவர்களுக்கு இருபது முதல் நாற்பத்தைந்து வயதுக்குள் இருக்கலாம். சிலர் பத்தாவது வரை படித்திருக்கிறார்கள். கடம்பத்தூர், மீஞ்சூர், பழவேற்காடு, சித்திரம்பாக்கம், எல்லாபுரம், ஆவடி, கும்மிடிப்பூண்டி போன்ற கிராமங்களிலிருந்து வந்திருந்தார்கள்.

இடம் : சென்னை டி.டி.கே சாலையிலுள்ள மெட்ராஸ் சோஷியல் சர்வீஸ் சொசைடி.

சாவித்திரி, சரசுவதி, லலிதா, ஜெயம்மாள் எல்லோருமே சமீப காலமாகத் தங்கள் கிராமப் பகுதிகளில் பொருளாதாரம் மேம்பட்டிருப்பதாகச் சொன்னார்கள். எப்படி என்று விசாரித்தோம்.

"சுய உதவிக் குழுக்கள் ஆரம்பிக்கப்பட்டாலும், முறையான விழிப்புணர்வு முகாம்கள் கிராமப்புறங்களில் நடந்த பிறகுதான், இந்தப் பெண்களுக்கு நம்பிக்கை வந்திருக்கிறது. கிராமப்புற தொழில் முனைவோர் திட்டத்தின் மூலம் எரிபொருள் சிக்கனம், சேமிப்பு, சுற்றுச்சூழல் பாதுகாப்பு பற்றி அறிய, குழு உறுப்பினர்கள் அளவில் பொருளாதார வளர்ச்சி காண, சென்ற வருடம் தான் அடித்தளம் போடப்பட்டது" என்கிறார் மேலாளர் ஜோசப்.

"கிராமப்புற ஏழைகள் வருவாய் பெறும் வகையிலும், தொழில்நுட்ப அறிவைப் பயன்படுத்தி, அன்றாடம் உபயோகிக்கும் கருவிகள் வாயிலாக, எரிபொருள் சிக்கனத்தின் மூலம் வாழ்க்கைத்தரத்தில் முன்னேற உதவுவதும்தான் முக்கியக் குறிக்கோள். நாங்கள் தயாரித்துக் கொடுக்கும் பாதுகாப்பான கெரசின் ஸ்டவ், முப்பது சதவிகித கெரசின் சேமிப்புக்கு உதவும் பர்னர்கள், எலக்ட்ரானிக் சோக், எமர்ஜென்சி விளக்குகள், சோலார் விளக்குகள், சோலார் மின் விசிறி, ட்யூப்லைட், இருபது சதவிகித சமையல் காஸ் சேமிப்புக் கருவி, பாதுகாப்பான எலக்ட்ரானிக் கொசுவிரட்டி, இவற்றைக் குறைந்த விலையில் தொண்டு நிறுவனங்களுக்குக் கொடுக்கிறோம். அவர்களிடமிருந்து சுய உதவிக் குழுக்கள் வாயிலாக இந்தப் பெண்கள் வாங்கி, கிராமப்புறங்களில் விற்று, கிடைக்கும் லாபத்தைச் சேர்த்து வைத்துக் கொள்கிறார்கள். இதனால் இவர்களுக்கு இரண்டு உடனடிப் பயன்கள் கிடைக்கின்றன. ஒன்று, எரிபொருள் சேமிப்பு. கெரசினுக்காக நூறு ரூபாய் செலவழிப்பதற்குப் பதில், எழுபது ரூபாய் மட்டுமே ஆகிறது. இரண்டு, தங்கள் சொந்தச் சேமிப்பின் மூலம் பொருளாதார பலம் பெறுகிறார்கள்" என்கிறார் 'சேர்வால்ஸ்' அதிபர் முகுந்தன். இவர் அகில இந்திய தயாரிப்பாளர் சங்க முன்னாள் தலைவர்.

# கையில காசு நெஞ்சுல தில்லு!



• முகுந்தன் மற்றும் ஜோசப்

"எலக்ட்ரானிக் பத்தி எல்லாம் முந்தி எனக்கு எதுவுமே தெரியாது. எல்லாம் எலக்ட்ரீஷியன் சொல்றதுதான். இப்போ நல்லாப் புரிஞ்சுக்கிட்டேன்!" என்கிறார் கடம்பத்தூர் ஒன்றியத்தைச் சேர்ந்த சரசுவதி.

இவர்களைப் பொறுத்தவரை, 'மைக்ரோ ஃபைனான்ஸ்' எனப்படும் அடிமட்ட நிதி உதவி மூலம், கிராமப்புறங்களில் பொருளாதார முன்னேற்றம் சாத்தியமாகி இருக்கிறது. இந்தப்

பகுதிகளிலேயே தங்கி, அவர்களுக்குப் புரியும்படி எடுத்துச் சொல்லும் பணிகளில், மன்மதன், ரகு, ஏழுமலை போன்ற இளைஞர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்த மூன்று மாதங்களாகத்தான் தொழில் முனைவோர் திட்டத்தைத் தீவிரமாகச் செயல்படுத்தி வருகிறார்கள்.

இதெல்லாவற்றுக்கும் மேலாக, காப்பீட்டு வசதி இங்கே அறிமுகப்படுத்தப்பட்டிருப்பது, இவர்களுக்குக் கூடுதல் நம்பிக்கை அளித்திருக்கிறது.

''முன்பு கால் சவரன் கம்மலைக் கழற்றிக் கொடுத்தால்தான் கிராமத்தில் கடன் கொடுப்பார்கள். கொடுத்தாலும், கடன் வாங்கினவர் இறந்து போய் விட்டால் பணம் திரும்பக் கிடைக்காதே என்ற கவலை இருந்தது. இப்போது இன்ஷுூரன்ஸ் மூலம் இருபதாயிரம் ரூபாய் கிடைத்து விடுவதால், சுய உதவிக் குழுக்கள் மூலமாகவே, எளிதாக இவர்கள் கடன் வசதி பெற முடிகிறது'' என்கிறார் முகுந்தன்.



• சுய உதவிக் குழுவினர்...

''சேமிப்பும், சுகாதார மேம்பாடும், சுற்றுச்சூழல் பாதுகாப்பும், கிராமப்புறங்களை மாற்றி அமைத்து விடுகின்றன!'' என்கிறார் மேலாளர் ஜோசப். ''மாவட்ட கிராமப்புற மேம்பாடு ஏஜென்சி மூலமும், வங்கிகள் மூலமும் இவர்களுக்குச் சுழல் முறை நிதியும் கிடைக்கிறது.''

**ப**யிற்சிக்கு வந்திருக்கும் அத்தனை கிராமப்புறப் பெண்கள் முகத்திலும் தன்னம்பிக்கை தெரிகிறது. துணிச்சல், பேச்சுப் பயிற்சி, ஆண்களையே எல்லாவற்றுக்கும் சார்ந்திருக்க வேண்டாம் என்ற தைரியம், எல்லாம் தானாக வந்திருக்கின்றன.

- சாருகேசி

படங்கள் : வெங்கடேஷ்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் : சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி : 22345622, 23, 24
தொலைநகல் : 044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# செல்லப்பிள்ளைகளின் வெல்லத் தொகுதிகள்

**பெரியகுளம், தென்காசி தவிர மற்ற தொகுதிகளிலெல்லாம் புதுமுகங்களை வேட்பாளராக்கியிருக்கிறது அ.தி.மு.க. இந்த இரண்டு தொகுதியில் மட்டும் அப்படி என்ன விஷேசம்?**

“தேர்தல் வருவதற்கு முன்பே களை கட்டிய தொகுதி ஒன்று உண்டென்றால், அது எங்கள் தொகுதிதான்” என்கிறார்கள் பெரியகுளம் வாக்காளர்கள்.

நாடாளுமன்றத்தைக் கலைத்துவிட்டு தேர்தலைச் சந்திக்கலாம் என்று தேசிய ஜனநாயகக் கூட்டணியில் பேச்சு கிளம்பிய உடனேயே, பெரிய குளம் தொகுதியில் இரட்டை இலை சின்னத்தை வரைந்து, டி.டி.வி. தினகரன் பெயரையும் எழுதத் தொடங்கி விட்டார்களாம். பெரியகுளம் நாடாளுமன்றத் தொகுதிக்கு உட்பட்ட ஒரு சின்ன கிராமத்தில் போய்க் கேட்டால் கூட, “எங்க ஊர் கோயில் திருப்பணிக்கு அள்ளிக் கொடுத்திருக்காருங்க” என்கிறார்கள் தினகரனை. எங்காவது கோவில் கொஞ்சம் சிதில மடைந்து கிடைக்கிறது என்றோ, கட்டிய கோவில் பாதியில் நிற்கிறது என்றோ தகவல் வந்தால், அடுத்த கணம் அங்கே ஆஜராகிவிடுவாராம் இந்தச் செல்ல எம்.பி.!



• முகமது சாரீப்






• மல்லிகா பேகம்



• ராஜேந்திரன்

இன்னொரு பக்கம், கல்யாணம் காது குத்து, மஞ்சள் நீராட்டு என்று கட்சியின் அடிமட்டத் தொண்டர் பத்திரிகை வைத்தாலும் சரி, தொகுதியில் இருந்தால் வாகனங்கள் புடை சூழ, ‘மொய் கவருடன்’ ஆஜராகி விடுவாராம்! பெரியகுளத்தில் இல்லாத சமயத்தில் இன்விடேஷன் வந்திருந்தால்,



• எஸ். முருகேசன்



• அப்பாத்துரை

ஊர் திரும்பியதும் மறக்காமல் போய், விஷேசம் நடந்த வீட்டில் தலை காட்டி விட்டு, கவரையும் தந்து விட்டு வந்தால்தான் தூக்கமே வருமாம். அதே போல, தன்னைக் காண பெரியகுளம் எம்.பி. அலுவலகத்திற்கு (தினகரனின் வீடும் இதுதான்) கோரிக்கை மனுவுடன் வரும் யாரையும் வெறுங்கையுடன் அனுப்ப மாட்டார், என்கிறார்கள் தொகுதிவாசிகள். இதனால் அவரது அலுவலக வாசலில் எப்போதும் தேனீக்கள் போல, ஒரு கூட்டம் மொய்த்தபடியே இருக்கும் என்று சிரிக்கிறார்கள் உள்ளூர்ப் பத்திரிகையாளர்கள்.

இதெல்லாம் இருக்கட்டும், ஒரு நாடாளுமன்ற உறுப்பினராக, தொகுதிக்கு என்ன செய்திருக்கிறார் தினகரன் என்று விசாரணையில் இறங்கினால், தமது எம்.பி. நிதியைக் கொண்டு கிராமப்புற சாலை வசதிகள், ஆழ்க்குழாய் கிணறுகள், அடிபம்பு என்று அமைத்து கொடுத்திருக்கும் தினகரன், சாமர்த்தியமாக ஒரு காரியம் செய்திருக்கிறார். தேனி மாவட்டத்தைச் சேராத ராஜ்யசபா உறுப்பினர்களான எஸ்.எஸ். சந்திரன், என். ஜோதி, டாக்டர் மைத்ரேயன், சி. பெருமாள், ஆர். காமராஜ், பி.ஜி. நாராயணன், கோகில இந்திரா ஆகியோரது நிதியையும், ஒரே ஒரு கண்ணசைவில் தமது தொகுதிக்கு இழுத்து, இருநூற்று எண்பத்து நான்குப் பணிகளைச் செய்திருக்கிறாராம்.

தேனி மாவட்டத்தில் மொத்தமுள்ள ஆறு சட்டமன்றத் தொகுதிகளில், கம்பம் தவிர (காங்கிரஸ்) ஏனைய ஐந்து தொகுதிகள் அ.தி.மு.க. வசமே இருப்பதால், சட்டமன்ற உறுப்பினர்கள், நிதியை முறையாகச் செலவிடுகிறார்களா என்று தமது உதவியாளர்களை விட்டு பார்த்து வரச் சொல்வதோடு, எந்தத் தொகுதியில் எந்தப் பணிக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்பதையும் இவர்தான் முடிவு செய்து பணிகளை முடுக்கி விட்டிருக்கிறார் என்கிறார்கள். ஆனால் தேனி - வத்தலகுண்டு சாலை, ஆண்டிப்பட்டி- தேனி சாலை, என்று தொகுதியில் இருக்கும் பல முக்கியச் சாலைகளை இப்போது தான் அவசர அவசரமாகப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.



• பட்டாளம்மனை வழிபட்டு பிரசாரம் தொடங்கும் டி.டி.வி. தினகரன்

## பெரியகுளம்– தென்காசி ரவுண்ட் அப்

அதேபோல் எழுபத்து இரண்டு கோடி தொடக்க மதிப்பீட்டில் மூன்றாண்டுகளுக்கு முன் போடப்பட்ட, ஆண்டிப்பட்டி - சேடப்பட்டி கூட்டுக் குடிநீர்த்திட்டம் அப்படியே இருந்த நிலையில், இப்போது தேர்தல் அறிவிப்பு





''மேடைக்கு மேடை 'என் ஒவ்வொரு தொண்டனும் பத்து பேருக்குச் சமம்'னு நீங்க பேசறதை உடனே நிறுத்தியாகணும் தலைவரே!''

''ஏன்யா?''

'''கள்ள ஓட்டுப் போடத் தயாரா கிறோம்'னு எதிர்க்கட்சிக்காரங்க தேர்தல் கமிஷனிடம் புகார் பண்ணுறாங்க!''

- வசந்தி வள்ளுவன்

---

வந்தவுடன் ஜெட் வேகத்தில் பணிகளை முடுக்கி விட்டிருக்கிறார்கள். வைகை - நீர் ஆதாரத்திலிருந்து குடிநீர் கொண்டு வரும் இந்தத் திட்டம் மூலம் தேனி, மதுரை மாவட்டங்களில் நாநூற்றி ஆறு கிராமங்கள் பயன் பெறும் என்று சொல்லப்பட்டாலும், வைகை அணையில் போதிய தண்ணீர் இல்லாத பட்சத்தில், இந்தத் திட்டம் பண விரயம் என்று தொகுதி மக்களே சொல்கிறார்கள்.

பெரிய குளம் தொகுதிக்கு உட்பட்ட கிராமம் மற்றும் நகர்ப் புறங்களில், சுமார் நான்காயிரம் சுய உதவிக் குழுக்கள் இருந்தபோதும், சுழற்சி நிதி உதவிக் கடன் எல்லாக் குழுக்களுக்கும் கிடைக்காதது பெரிய அதிருப்தியை, பெண்கள் மத்தியில் ஏற்படுத்தியிருக்கிறது. எனினும் ''டெல்லியில் ரூம் போட்டுத் தங்காமல் தொகுதியிலேயே வசிக்கிறவர் எங்கள் எம்.பி. எங்கள் கிராமத்துல பல குடும்பங்களுக்கு ரேஷன் கார்டு இல்லே. கட்டாயம் வாங்கித் தரேன்னு சொல்லி இருக்கார். அவருக்குத் தான் வோட்டு'' என்கிறார் கா. புதுப்பட்டி கிராமத்தைச் சேர்ந்த மல்லிகா பேகம்.

ஆனால், பெரியகுளம் இளைஞரான முகமது சாரீப் சொல்வது வேறு. ''இந்த முறை ஒன்றேமுக்கால் லட்சம் இஸ்லாமிய வாக்குகள் கொண்ட இந்தத் தொகுதியில், ஒரு வாக்கு கூட தினகரனுக்குக் கிடைக்காது. காரணம், பா.ஜ.க.வுடன் கூட்டணி வைத்துக் கொண்டதுதான்'' என்கிறார்.

''கடந்த முறை திமுக, பா.ஜகவுடன் கூட்டணி வைத்ததால், சுயேச்சையாகப் போட்டியிட்ட நடிகர் மன்சூரலிகான், எண்பத்தைந்தாயிரம் இஸ்லாமிய வாக்குகளைப் பெற்றார். இந்த வாக்குகள் அத்தனையும் தி.மு.க. வாக்குகள்'' என்கிறார் இவர்.

கடந்த முறை தினகரன் எழுபத்தைந்தாயிரம் வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றிருந்தாலும், இந்த முறை இஸ்லாமிய சமுதாய வாக்குகள் தி.மு.க.வுக்குக் கிடைக்கும் பட்சத்தில், காங்கிரஸ் வேட்பாளர் வெற்றி பெற வாய்ப்பு அதிகமுள்ளது என்கிறார்கள்.

''டி.டி.வி. தினகரனுக்கு இணையாக, தேர்தல் செலவு செய்ய வசதியுள்ள ஜே.எம். ஆரூணுக்கு காங்கிரஸ் வாய்ப்பு வழங்கினால் வெற்றி உறுதி'' என்று பலரும் சொல்ல, தினகரனோ, ''தொகுதிக்கு என்ன செஞ்சிருக்கோம்ன்னு நாங்க சொல்றதைவிட, மக்கள்கிட்டே கேட்டுத் தெரிஞ்சுக்குங்க... இந்த முறை குறைந்தது ஐம்பதாயிரம் வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெறுவேன்'' என்கிறார்.

ஆனால், ''எம்.பி.யைக் காணவில்லை'' என்று அறிவிப்புப் பலகை வைக்கப்பட்டது தென்காசி (தனி) தொகுதிதான்! நாடாளுமன்ற உறுப்பினர், எஸ்.முருகேசனது வெற்றி வாய்ப்பு இந்த முறை கேள்விக்குறி என்று அடித்துச் சொல்கிறார்கள், தொகுதி வாக்காளர்களில் பலர். கடந்த தேர்தலில் வெறும் எண்ணூற்று எண்பத்தேழு வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்ற இவர், தொகுதிக்குப் பெரிதாக எதுவும் செய்துவிடவில்லை. அதைவிடக் கொடுமை, ஆரம்பத்தில் திறக்கப்பட்ட எம்.பி. அலுவலகத்தைக் கூட, பின்னர் மூடிவிட்டார்கள் என்று குற்றம் சாட்டுகிறார்கள் எதிரணியினர். ஆனால் இதையெல்லாம் மறுக்கிறார் முருகேசன்.

''எம்.பி.யைக் காணவில்லை என்று அறிவிப்புப் பலகை வைத்தவர் ம.தி.மு.க. ஒன்றியச் செயலாளர் ஒருவர். இது மக்களுடைய கருத்து இல்லை. எனது எம்.பி. நிதியை அவசியத் தேவையுள்ள பணிகளுக்கு வேகவேகமாகச் செய்து முடித்திருக்கிறேன். இது தவிர, நீண்ட காலகோரிக்கையான தென்காசி ரயில்வே மேம்பாலம் பெற, ரயில்வே அமைச்சர் நிதிஷ்குமாரைச் சந்

தித்து ஒப்புதல் பெற்று வந்திருக்கிறோம். தாமிரபரணி - மானூர் கூட்டுக் குடி நீர்த் திட்டப் பணிகள் முழுவதும் நிறை வடைந்துவிட்டன. நன்றாகச் செயல்பட்ட தால்தான், அம்மா எனக்கு மறுபடியும் வாய்ப்புத் தந்திருக்கிறார்" என்கிறார்.

ஆனால் 'தொழில் வறட்சி மிகுந்த தென்காசித் தொகுதியில் இவர் எதையும் சாதித்துவிடவில்லை' என்கிறார் மானூரரைச் சேர்ந்த ராஜேந்திரன்.

பத்து முறைக்கு மேல் இங்கே வெற்றி களைக் குவித்திருக்கும் காங்கிரஸ் கட்சி, இந்த முறை தி.மு.க.வுடன் கூட்டணி அமைத்திருப்பதால், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளரான அப்பாத்துரைக்கு வெற்றி வாய்ப்புகள் அதிகம் என்கிறார்கள் எதிரணியினர். காரணம், இந்தத் தொகுதி யிலும் ஒரு லட்சத்து இருபதாயிரம் இஸ்லா மிய வாக்குகள். இவை தவிர, அம்பாச முத்திரம், வாசுதேவநல்லூர், கடையநல்லூர் சட்டமன்றத் தொகுதிகளில் இந்திய கம் யூனிஸ்ட் கட்சிக்கும், ஆலங்குளம், சங்கரன் கோவில் தொகுதிகளில் மார்க்சிஸ்ட் கட்சிக்கும் வாக்காளர்கள் அதிகம்.

கடந்த இரண்டு நாடாளுமன்றத் தேர்தல்களில் (1998 - 99) தலா ஒரு லட்சத்து இருபத்து மூன்றாயிரம், ஒரு லட்சத்து எண்பத்து ஆறாயிரம் வாக்குகளைப் பெற்ற புதிய தமிழகம் தலைவர் டாக்டர் கிருஷ்ண சாமி, மூன்றாவது அணியின் சார்பில் இங்கே போட்டியிடுகிறார். இதனால் அ.தி.மு.க. - சி.பி.ஐ. இடையிலான போட்டி இழுபறி நிலைக்குத் தள்ளப்படும் என்கிறார்கள். "இந்தத் தொகுதிக்கு உட்பட்ட ஆறு சட்ட மன்றத் தொகுதிகளும் அ.தி.மு.க. கைவசம் இருந்தாலும், வெங்கடேச பண்ணையார் என்கவுண்டர், எச் முத்திரை ரேஷன் கார்டு போன்ற பல பிரச்னைகள், நாடார், தேவர் சமுதாய வாக்காளர்களை இந்த இரண்டு செல்லத் தொகுதிகளிலுமே அதிருப்தி அடையச் செய்திருக்கின்றன" என்கிறார் அரசியல் வல்லுனர் ஒருவர்.

- ஜெயந்தன்

---

## மாண்புமிகு டாப் டென் - 5 போட்டி முடிவு

### தினமலர் ஆர்.மோகன் போட்ட மார்க் 33/100


• தினமலர் ஆர்.மோகன்

முதல்வர் ஜெயலலிதாவுக்கு மார்க் போட சில பத்திரிகை யாளர்களே முன்வர தயங்கியபோது தினமலர் ஆர்.மோகன் 'நான் போடறேன்' என்றார்.

அவர் போட்ட மார்க் 33/100. கொஞ்சமல்ல, ஆநி யாயத்துக்கு கஞ்சத்தனம் செய்து மார்க் போட்ட சில வாசகர்களுக்கும், தாராள பிரபுவாக மார்க்கை அள்ளிக் கொடுத்தவர்களுக்கும் நன்றி.

மோகன் போட்டதற்கு மிக அருகில் (34/100) மார்க் போட்டு பரிசை வென்ற சோலாப்பூர் வாசகர்.

என். ஸ்ரீதர்,
125/5, சுதாதி சால்,
ஆர்.எஸ். ரோடு,
சோலாப்பூர் - 413 001.

| | தகுதி | முழு மதிப்பெண் | ஜெயலலிதா பெற்றது |
|---|---|---|---|
| 1. | தலைமைப் பண்பு (லீடர்ஷிப் குவாலிடி, வசீகரம்) | 10 | 5 |
| 2. | முடிவெடுக்கும் திறன் | 10 | 10 |
| 3. | கறைபடாத கரங்கள் | 10 | 0 |
| 4. | அரசியல் சாணக்கியம் | 10 | 5 |
| 5. | மனித நேயம் | 10 | 3 |
| 6. | தொண்டர்களோடு தோழமை | 10 | 0 |
| 7. | மேடைப் பேச்சு | 10 | 2 |
| 8. | மாற்றுக் கட்சியினரை மதிக்கும் போக்கு | 10 | 0 |
| 9. | தனிமனித ஒழுக்கம் | 10 | 3 |
| 10. | நிர்வாகத் திறமை | 10 | 5 |
| | மொத்தம் | 100 | 33 |



* பொதுக்கூட்ட மேடையில்

வடக்கத்தி அம்மன், முத்தாரம்மன், காளியம்மன் கோவில்களுக்குக் கொடை விழா என்றால், சொந்த பந்தங்களுக்கு அழைப்பு பறக்கும். கத்தோலிக்க தேவாலயம், பள்ளி வாசல் ஆண்டுத் திருவிழாக்களும் இதற்கு விதிவிலக்கு கிடையாது. ஆனால் கடந்த இரண்டு ஆண்டுகளாக, சோகமும், வறட்சியும் சூழ்ந்து கிடந்த அந்தக் கரிசல் கிராமம், கடந்த மாதம் இருபத்தெட்டாம் தேதி, வான்மழையைக் கண்டதுபோல் உற்சாகமாகச் சிலிர்த்துக் கொண்டது. ஊரெங்கும் விழாக்கோலம், வாண வேடிக்கை. எல்லாம் வைகோவின் வரவுக்காக!

மதுரையில் பத்திரிகையாளர்களைச் சந்தித்துவிட்டு, காலை பத்துமணி அளவில் தொண்டர்கள் புடை சூழப் புறப்பட்ட வைகோவுக்கு, வழி நெடுகிலும் உற்சாக வரவேற்பு.

சிவகாசி நகரில், திக்குத் தெரியாத காடு போல மக்கள் கூட்டம். சிவகாசியிலிருந்து கோவில்பட்டி, சாத்தூர், திருவேங்கடம், கலிங்கப்பட்டி வரை, நூற்று இருபத்தைந்து கிலோ மீட்டர் தூரத்திற்குத் தொடர்ச்சியாக, ம.தி.மு.க. கொடி மற்றும் தோரணங்களைக் கட்டி இருந்தார்கள் தொண்டர்கள். தொண்டர்களும் மக்களும் தந்த உற்சாக வரவேற்பில் சிக்கிக் கொண்ட வைகோ, திட்டமிட்டபடி அன்று மாலை கலிங்கப்பட்டியை அடைய முடியவில்லை. ஆனால் மாலை ஆறு மணிக்கெல்லாம், சுமார் ஒரு லட்சம் தொண்டர்கள் கலிங்கப்பட்டியில் குவிந்து விட்டார்கள். வைகோவின் வீட்டருகே நிலத்தைச் சமப்படுத்தி மேடை அமைத்திருந்தார்கள். கலிங்கப்பட்டியை நோக்கிக் குவிந்த தொண்டர்கள், ஆவலோடு அவரது வீட்டுக்குப் படையெடுத்த வண்ணமிருந்தனர். வீட்டின் திண்ணைச் சுவரில் மாட்டப்பட்டிருந்த வைகோவின் இளவயது கறுப்பு வெள்ளைப் படங்களைப் பார்த்து ரசித்தவர்கள், வைகோவின் தாயாரைப் பார்க்கும் ஆவலோடு 'அம்மாவை வரச் சொல்லுங்க' என்று சத்தத் தொடங்கினார்கள் வேறு வழியில்லாமல் வீட்டின் இடப்புற அறைக்கு வந்தார், வைகோவின் தாயாரான மாரியம்மாள். முதுமையிலும் உறுதி குலைந்து விடாத அந்த மூதாட்டியைப் பார்த்த சந்தோஷத்தில், "வைகோவைத் தந்த தமிழ்த் தாயே வாழ்க!" என்று கோஷம் போட, நெகிழ்ந்து தொண்டர்களைப் பார்த்து கை கூப்பினார் அவர்.

தொண்டர்களின் ஆவலை நிறைவேற்ற அவரை மேடைக்கு அருகே அழைத்து வந்தார்கள். "உங்க பிள்ளையை இத்தனை நாள் ஜெயில்ல போட்டது பத்தி என்ன நினைக்கிறீங்க?" என்று நிருபர் போல ஒரு தொண்டர் கேட்க, "எத்தனை வருஷமானாலும் எம் புள்ளை கலங்கமாட்டான். அவனைப் பெத்து நாட்டுக்கு கொடுத்துட்டேன்" என்ற போது, மீண்டும் கோஷம் காதைப் பிளந்தது. அவரை மெல்ல நெருங்கி, "கடைசியாக உங்கப் பிள்ளையை எப்போ பார்த்தீங்க?" என்ற போது "வேலூர் ஜெயிலில் பார்த்தேன். நான்



* பிடிவாத தங்கராஜ்

# சிலிர்த்தது கலிங்கப்பட்டி!





தொண்டர்களும் எழுந்து நின்று கோஷம் போட்டதில், கலிங்கப்பட்டியே கலகலத்துப் போனது.

முக்கிய கட்சிப் பிரமுகர்கள் பின் வரிசையில் இருக்க, பொடா சிறை மீண்ட எட்டு கட்சி நிர்வாகிகளைத் தம் அருகிலேயே அமர்த்திக் கொண்ட வைகோவை, வீர பாண்டியக் கட்டபொம்மன் வழி வந்த வாரிசான பீமராஜா மேடைக்கே வந்து வாழ்த்தினார். 'வைகோ சிறையிலிருந்து வந்த பிறகுதான் கறுப்புச் சட்டையை மாற்றுவேன்' என்று



• உற்சாக வரவேற்பு



ஆசையா கட்டுகிட்டுப் போன முறுக்கைக் கூட அவன் வாங்கிக்கலே. தொண்டர்கள் கிட்டே இருந்து நான் பழங்களையோ வேறு எதையுமோ வாங்குறது இல்லே. சிறையிலே போடுற உணவு போதும்ன்னு சொல்லி அனுப்பிட்டான். அவன் உடம்பு இளைச்சுப் போயிருக்கு.. ஆனா, மனசுலே உரம் குறைஞ்சு போயிடலே" என்று உற்சாகமாகச் சொன்னார்.

இதற்கிடையில் கலிங்கப்பட்டியின் எல்லையான சத்திரப்பட்டிக்கு வந்து சேர்ந்த வைகோவுக்கு இரண்டு யானைகள் மாலை போட, குதிரைகள் பூட்டிய சாரட் வண்டியில் ஏற்றி, கலிங்கப்பட்டிக்கு அழைத்து வந்தார்கள். இரவு ஒன்பது மணிக்கு வைகோ பொதுக் கூட்ட மைதானத்தை நெருங்கிய போது, அங்கே அமர்ந்திருந்த ஒரு லட்சம்



* கைப்பந்து அணி



* பரிசு வாங்கிய மாணவிகள்

பிடிவாதமாக இருந்த குமரியைச் சேர்ந்த தொண்டர் தங்கராஜ், வைகோ கையால் வெள்ளைச் சட்டை அணிந்து கொண்டது; சினிமா வெள்ளி விழா நிகழ்ச்சியில் வழங்கப் படுவதுபோல, பொடா மீண்டவர்களுக்கும், வைகோவுக்கும் கலைப்புலி தாணு கேடயம் வழங்கியது என்று மேடை பரபரப்பாக இருந் தாலும், வைகோவுடன் சிறு வயது முதலே பழகிய நண்பர்கள் மேடைக்கு வந்து, அவருக்கு மாலைபோட்டு கௌரவித்தது நெகிழ்ச்சியாக இருந்தது!

பொதுக் கூட்டம் நடந்து கொண்டிருந்த போது, மேடையின் அருகே கூச்சல் போட்ட படி முண்டியடித்த தொண்டர்களை, வைகோ எழுந்து வந்து கண்டித்து அமைதிப் படுத்தினார். மைக்கைப் பிடித்தவர், மூன்று மணி நேரம் பேசினார்.

''இந்த கிராமத்தில் நான் அரசியல் பேசு வது இதுதான் முதல் முறை. எனது ஊரில் இனி நான் அரசியல் பேசமாட்டேன். இது சமதர்ம பூமி. முன் மாதிரி கிராமம். இங்கே யார் இறந்து போனாலும் எரியூட்டுவதற்கு ஒரு மயானம் தான் உண்டு. அது சமத்துவ மயானம். தமிழகம் கலிங்கப்பட்டிபோல மாற வேண்டும்'' என்றவர், தமது பால்யம், இளமைக்காலம் என்று, கிராமத்திற்கும் தமக்குமான உறவுகளை நினைவு கூர்ந்தார். அவரது பேச்சில் காரமான அரசியல், குறை வாகத்தான் இருந்தது.

ஆனால் ''ஜாதி, மதத்தின் பெயரால் மனித உயிர்கள் போவதை அனுமதிக்கவே முடியாது. இதற்காக முதலில் பாடுபடுவேன். அப்புறம் தான் அரசியல்'' என்பதைத் தமது உரையில் முத்தாய்ப்பாகச் சொன்ன வைகோ, தமது மகன் துரை வையாபுரி அரசியலுக்கு வரமாட்டார் என்பதை, சூசகமாகச் சொன்னாலும் உறுதிபடச் சொன்னார்.

வைகோ குறிப்பிட்டது போலவே தி.மு.க. கிளைக் கழகச் செயலாளராக இருந்த காலம் தொட்டு, கட்சியைத் தவிர்த்து, திருவள்ளுவர் கழகம் என்ற பொது அமைப்பின் மூலம் விழாக்களை நடத்தியிருக்கிறாராம். ஊர் இளை ஞர்களை ஊக்கப்படுத்துவதென்றால் வைகோ வுக்கு அப்படியொரு விருப்பம் என்கிறார்கள்.

கலிங்கப்பட்டி அரசு மேல்நிலைப்பள்ளி யில் ஒவ்வொரு வகுப்பிலும் முதல் மூன்று இடங்களைப் பிடிக்கும் மாணவ, மாணவி களுக்கும், விளையாட்டுப் போட்டிகளில் வெல்லும் மாணவிகளுக்கும், வைகோதான் பரிசு வழங்குவது வழக்கம். வைகோ சிறை யில் இருந்ததால் இரண்டு வருடமாகக் காத் திருந்த பரிசுகளை, இப்போது அவரது கையால் வாங்கி சந்தோஷப்பட்டிருக்கிறார் கள் கலிங்கப்பட்டி மாணவ, மாணவிகள்.

கலிங்கப்பட்டி வையாபுரி மாரியம்மாள் கைப்பந்து அணி என்றால், மாவட்டம் முழுவதும் பிரபலம். இந்த அணியை மாநில அளவில் திறமையான அணியாக மாற்ற வேண்டும் என்று நினைத்த வைகோ, கிட்டத் தட்ட நாற்பது வீரர்களை உருவாக்கிய தோடு, ஒன்றிய அளவில் வருடத்திற்கு மூன்று முறை போட்டிகள் நடத்திட ஊக்கு விப்பாராம். ''சிறையிலிருந்து எங்களுக்கு அவ் வப்போது கடிதம் எழுதி உற்சாகம் தருவார். நாங்கள் விளையாட நிலம், உபகரணங்கள் என்று எல்லாம் அவர் கொடுத்தது தான்'' என்கிறார் அணித் தலைவர் முத்தால் ராஜ். மாணவர்கள், இளைஞர்கள் மீது அதிக அன்பு செலுத்தும் வைகோ, 'கலிங்கப்பட்டி மக்கள், வேறுபாடுகள் எதுவும் இல்லாமல் இப்போதுபோலவே இறுதிவரை ஒற்றுமை யாக இருக்க வேண்டும். அதற்காக எதையும் செய்யலாம்' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பார். ''அவரது குடும்பச் சொத் தாக ஊரில் இருந்த திரையரங்கின் முன் னால் கூடி அரட்டை அடிக்கிறார்கள் என்று அறிந்து, அந்தத் திரையரங்கை ஜெப வீடா கப் பயன்படுத்திக் கொள்ளும்படி கிறிஸ்தவ மக்களுக்குக் கொடுத்துவிட்டார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்'' வியந்து மகிழ் கிறார்கள் மக்கள்!

கட்டுரை படங்கள் : **ஆர்.சி.ஜெ.**

# வானதியின் புதிய நூல்கள்






| | |
|---|---|
| **ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளுரைகள் (I)** | **80.00** |
| **ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளுரைகள் (II)** | **80.00** |
| **ஸ்ரீ ஜயேந்திரரின் பொன்னுரைகள்** *(பீடாரோகணப் பொன்விழா வெளியீடு)* | **50.00** |
| **நாளுக்கொரு நற்சிந்தனை -** *ஸ்வாமி தயானந்த சரஸ்வதி* | **90.00** |
| **நம் சந்தேகங்களுக்கு** - *ஸ்வாமி தயாணந்தரின் பதில்கள்* | **50.00** |
| **அவ்வையார் பாடல்கள் தமிழ் உரை** - ஆங்கில மொழி பெயர்ப்பு - *பேராசிரியர் எஸ்.என். சொக்கலிங்கம்* | **40.00** |
| **இன்னா நாற்பது; இனியவை நாற்பது** *(உரையுடன்)* | **50.00** |
| **திரிகடுகம், நான்மணிக்கடிகை** *(உரையுடன்)* | **60.00** |
| **வழிகாட்டும் ஞானிகள்** - *ப.ந. தியாகராஜன்* | **75.00** |
| **12 ஜோதிர்லிங்கத் தலங்கள்** *(வண்ணப்படங்களுடன்) - ஜபல்பூர் நாகராஜ சர்மா* | **90.00** |
| **தலம்தோறும் தமிழ்க் கடவுள்** *(வண்ணப்படங்களுடன்) - குருஜி ஏ.எஸ். ராகவன்* | **70.00** |
| **ஸ்ரீ வைஷ்ணவத்தை வளர்த்த குருபரம்பரை** *- ஜெ. ஜெயலட்சுமி* | **70.00** |
| **கல்கி பாடல்கள்** - *கல்கி (படங்களுடன்)* | **35.00** |
| **பாரதத்தின் புனிதப் பாடல்கள்** - *வி.கே. சுப்பிரமணியம்* | **50.00** |
| **தமிழ்மேம்பாடு** - *முனைவர் தமிழ்க்குடி மகன்* | **35.00** |
| **தமிழ் இலக்கியத்தில் அறிவியல் சிந்தனைகள் -** *100 பேராசிரியர்கள்* | **250.00** |
| **கண்ணதாசன் ஆய்வுக்கோவை** *-100 பேராசிரியர்கள்* | **250.00** |
| **தென்கச்சியின் சுவையான தகவல்கள்** | **150.00** |
| **தென்கச்சி சுவாமிநாதன் கவிதைகள்** | **30.00** |
| **தகவல் களஞ்சியம் - (I)** *தென்கச்சி சுவாமிநாதன்* | **40.00** |
| **தகவல் களஞ்சியம் - (II)** *தென்கச்சி சுவாமிநாதன்* | **60.00** |
| **வாரியார் வழங்கும் மணைவாழ்வு** - *வாரியார்* | **150.00** |
| **மங்கல மங்கையர்** - *வாரியார்* | **120.00** |
| **கோதையின் பாதை - (I)** *முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சாரியார்* | **110.00** |
| **புத்தர் போதித்த ஞானம்** - *ஆசார்ய லோகபாலா* | **30.00** |






















---

தேவையான புத்தகங்களுக்கு **VANATHI PATHIPPAKAM** என்ற பெயருக்கு ***DD*** அல்லது ***MO*** அனுப்புக. வி.பி.பி. மூலமும் பெறலாம். தபால் செலவு தனி.



விவரங்களுக்கு : **வானதி பதிப்பகம்**

23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை-17. போன் : 23432810, 24310769

இந்தியா ஒளிர்கிறது...

ஓ... போடு..

# ஒற்றுமை ஒளிரட்டும்!

ஏப்ரல் 20 முதல் மே 10 வரை, தேர்தல்கள் நடக்கும் என்ற அறிவிப்பைத் தொடர்ந்து பல விஷயங்கள் மளமளவென்று நடந்துவிட்டன.

தேர்தல் தேதியை அறிவித்த கையோடு, தேர்தல் கமிஷன் நன்னடத்தை விதிகள் அமுலுக்கு வந்துவிட்டதாக அறிவித்துவிட்டது; அவ்விதிகளை மீறுவோர் பேரில் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்று எச்சரித்துமிருக்கிறது.

டெல்லி உயர்நீதிமன்றமோ, தேர்தல் கமிஷனுக்கே ஆணை பிறப்பித்திருக்கிறது. தற்போது பொறுப்பில் உள்ள எம்.பிக்கள், எம்.எல்.ஏக்கள் உள்பட அனைத்து வேட்பாளர்களின் சொத்து விவரங்களையும், அவர்களது கடன் பாக்கிகளையும், டெலிபோன், மின்சாரக் கட்டணம் போன்ற பாக்கிகளையும் ஊரறிய, உலகறியச் செய்வது கமிஷனின் பொறுப்பு என்கிறது டெல்லி உயர்நீதிமன்றம். அவ்விவரங்கள் கைவசம் இருந்தால், சம்பந்தப்பட்ட வேட்பாளர் குறித்து முடிவெடுக்க வாக்காளருக்குச் சௌகரியமாய் இருக்கும் என்கிறது.

நீதிமன்றம் சொல்கிறபடி தேர்தல் கமிஷன் செயல்படலாம்; நன்னடத்தை விதிகள் குறித்து கடுமையாக எச்சரித்து தினமும் அறிக்கை வெளியிடலாம். ஆனால், நடைபெறவிருக்கும் தேர்தலில், ஒவ்வொரு நாடாளுமன்ற, சட்டமன்ற வேட்பாளரும் நன்னடத்தை விதிகளை மீறாமல் நடந்து கொள்கிறாரா என்று கண்காணிப்பது இயலாத காரியம்.

யாரும் கண்காணிக்காதபோதும் விதிமுறைகளை மீறாமல் நடந்து கொள்வது என்பதுதான், பொது வாழ்வில் ஈடுபடுவோருக்கு முதல் தகுதியாக இருக்க வேண்டும். இந்தத் தகுதிக்குக் கட்சியே வேட்டு வைத்துவிடுவது தான் இன்றைய நடைமுறையாக இருக்கிறது. வேட்பாளராகத்



கல்கி



2004 மார்ச் 14
சுபானு பங்குனி 1
மலர் : 62
இதழ் : 33

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் அறுபது - எழுபது லட்சங்கள், ஒரு கோடி என்று கட்சிக்குக் கப்பம் செலுத்த வேண்டியிருக்கிறது. தோற்றால், மொத்தமும் நஷ்டம்தான். ஜெயித்தாலோ, கப்பம் கட்டிய தொகையைப் போல் பல மடங்கைச் சுரண்டல், லஞ்ச - ஊழல் மூலம் சம்பாதிப்பது என்பதுதான் முதல் குறிக்கோள்!

நன்னடத்தைக்கே இடங்கொடாத ஒரு சூழலை உருவாக்கிவிட்டு, தேர்தல் காலத்தையொட்டிய நன்னடத்தை விதிகளைப் பற்றி, நாம் பேசுவதிலும் கவலைப்படுவதிலும் என்ன அர்த்தம் இருக்கிறது!

வேட்பாளர்கள், தாங்கள் தேர்தலில் செலவழித்த பணத்துக்குக் கணக்குத் தர வேண்டும் என்பது தேர்தல் கமிஷனின் விதி. பொய்யோ மெய்யோ, இதற்கு ஒரு கணக்கு தரப்பட்டுவிடும். ஆனால், வேட்பாளருக்காக கட்சி செலவழிக்கும் தொகைக்கு ஏது கணக்கு...?

தேர்தல் என்பது அரசாங்கத்துக்கு ஒரு பெரிய செலவு என்பது போக, அரசியல் கட்சிகளுக்கும் மிகப் பெரிய செலவு. இத்தனை பணமும் எங்கேயிருந்து வருகிறது என்று பார்த்தால், மக்களின் வரிப்பணமாக அரசுக்குக் கிடைக்கிறது; சிறிதும் பெரிதுமான தனியார், தொழில் நிறுவனங்களின் நன்கொடைகளாகக் கட்சிகளுக்குக் கிடைக்கிறது. எவ்வாறாயினும், இறுதிச் சுமை சாமானிய மக்களுக்குத்தான்.

மக்களின் சுமையைக் குறைக்கவும், பணத்தைக் காட்டி வோட்டு வாங்கும் கேவலத்தை மாற்றவும், ஒரே வழிதான் இருக்கிறது. தற்போது நன்னடத்தை விதிகளின்கீழ் வரும் பல கட்டுப்பாடுகள், சட்டமாக்கப்பட வேண்டும். இந்தத் தேர்தல் சீர்திருத்தத்தை, மக்கள் பிரதிநிதிகளான அரசியல்வாதிகள் மேற்கொள்ளமாட்டார்கள். தேர்தல் கமிஷன்தான் முன்னின்று, வெகுஜன கருத்து உருவாகி வலுப்பெறவும், நீதிமன்றம் மூலம் ஆணை பெற்று, புதிய சட்டங்கள் இயற்றவும் பாடுபட வேண்டும்.

இந்தத் தேர்தலுக்குள் இத்தனையும் நடந்து முடிந்துவிடாது. ஆகவே, மக்கள் விழிப்போடு இருந்து வேட்பாளர்களின் பண பலத்தில் மயங்கிவிடாமல், ஆற்றலையும், கொள்கையையும் எடைபோட்டு முடிவுக்கு வரவேண்டும்.

புதிய தலைமைத் தேர்தல் கமிஷ்னர் பதவி ஏற்றதுமே, 'இந்தியா ஒளிர்கிறது' அரசு விளம்பரங்களுக்கு ஆட்சேபணை தெரிவித்ததும், 'தேர்தல் இன்னும் அறிவிக்கப்படவில்லையாதலால் விளம்பரங்களில் தவறில்லை' என்று அரசு தரப்பில் பதில் கூறப்பட்டதும் நினைவிருக்கும். இப்போது பா.ஜ.க. என்ன சொல்கிறது...? அத்வானியின் 'பாரத் உதய் யாத்ரா', 'இந்தியா ஒளிர்கிறது' பிரசாரத்தை நினைவூட்டும் வகையில், அதன் தொடர்ச்சியாகவே அமையும் என பிரமோத் மஹாஜன் மட்டுமின்றி, அத்வானியே




கூட சொல்கிறார்!

ஆக, 'இந்தியா ஒளிர்கிறது' விளம்பரங்கள் தேர்தலை உத்தேசித்து, கட்சிக்காகச் செய்யப்பட்டவையேயன்றி, ஆட்சியின் சிறப்பை எடுத்துச் சொல்ல அல்ல, என்பது அவர்கள் வார்த்தைகளாலேயே நிரூபணமாகியிருக்கிறது. இது என்ன நன்னடத்தையில் சேர்த்தி...? சட்டத்தின் நோக்கத்தைக் காற்றில் பறக்கவிட்டுவிட்டு, சட்டப்படி நடந்து கொள்வதாகக் கூறுவது சத்தான வாதமல்ல; சக்கை வாதம்.

முடிந்து போனதை மாற்ற முடியாத நிலையில், இனி வரும் நாட்களிலாவது பா.ஜ.க. கவனமாகவும் முறைதவறாமலும் நடந்து கொள்ள வேண்டும்.

காங்கிரஸ் தனிப்பட்ட முறையில் கருத்துக் கணிப்பு நடத்தியதில், அதன் வெற்றி வாய்ப்புகள் மிக அதிகம் என்பதாக முடிவுகள் வெளியாகியுள்ளன. இதனால் காங்கிரஸ் அலட்சியமாக இருந்துவிடக்கூடாது.

இந்த காங்கிரஸ் ஆதரவு அலையை மாற்றும் நோக்கில்தான், அத்வானியின் பேருந்து யாத்திரை நடக்கவிருக்கிறது என காங்கிரஸும், இந்த யாத்திரையினால் மத உணர்வுகள் தூண்டப்பட்டுக் கலவரங்கள் எழ வாய்ப்பு இருக்கிறது என வேறு சில எதிர்க் கட்சிகளும் சுட்டிக் காட்டுகின்றன.

பா.ஜ.க.வின் இன்றைய பொருளாதாரக் கோட்பாடுகளும் கொள்கைகளும், எவ்வளவுக்கெவ்வளவு அறிவு சார்ந்த முற்போக்குக் கொள்கைகளோ, அவ்வளவுக்கவ்வளவு அபாயகரமானது, பிற்போக்கானது, ஹிந்துத்வா கோட்பாடு. ஆகவே, பேருந்து யாத்திரையின்போது மத உணர்வுகளை நேரடியாகவோ, மறைமுகமாகவோ தூண்டுவதில்லை, என்று பா.ஜ.க.வினர் உறுதி எடுத்துக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும்.

நேரடியாக மத துவேஷத்தைத் தூண்டினால், சட்டமோ, தேர்தல் கமிஷனோ உடனே தலையிடலாம்; நடவடிக்கை எடுக்கலாம். மறைமுகமான தூண்டுதல்களைச் சட்டப்படியும் நிரூபிக்க முடியாது; நன்னடத்தை விதிகளின் கீழும் உறுதி செய்ய முடியாது.

இந்தியா ஒளிர வேண்டும் என்பதில் நமக்கு இரண்டாவது கருத்தே கிடையாது. அதன் பிரகாசம், ஒற்றுமை, சகோதரத்துவம், அன்பு நெறியில்தான் அடங்கியிருக்கிறது; துவேஷங்களை வளர்ப்பதிலும் நியாயப்படுத்துவதிலும் அல்ல.

இதை பா.ஜ.க. மட்டுமின்றி அதன் தோழமை அமைப்புகளும் உணரும்போதுதான், மெய்யாகவே இந்தியா ஒளிரும்.




முதல்வரான பிறகு தமது விருது நகர் இல்லத்திற்கு வருகிறார் காமராஜர். உணவருந்த வரும்படி அவரது அம்மா பாசமுடன் அழைக்க, முற்றத்தின் ஒரு மூலையில் போடப்பட்டிருக்கும் தண்ணீர்க் குழாயில் கைகளைச் சுத்தம் செய்துவிட்டு நிமிர்கிறார். அந்த 'பைப் லைன்' அங்கே புதிதாக போடப்பட்டிருப்பதை உணர்ந்து, அம்மாவிடம் கேட்கிறார். அவரோ "நான் தெருமுனையிலே போய் தண்ணீர்ப் பிடிக்கிறதைப் பார்த்துட்டு, பஞ்சாயத்துக்காரங்கதான் போட்டுக் கொடுத்தாங்கப்பா" என்று சொல்ல, "முதல்ல உனக்குச் சலுகைக் கொடுத்தா ஊருலே பல பேருக்குக் கொடுக்க வேண்டி வரும்" என்று சொல்லி அந்த நிமிடமே பைப் லைனைப் பிடுங்க உத்தரவிடுகிறார்.

நூற்றி ஐம்பது ரூபாய் கேட்டு கடிதம் அனுப்பும் அம்மாவுக்கு மாதம் நூற்றி இருபதுக்கு மேல் அனுப்ப முடியாது என்று மறுத்து விடுகிறார். பரீட்சைக் கட்டணம் செலுத்த வசதியற்ற ஏழைப் பிள்ளைகளுக்கு உதவும் அதே நேரம் சாராயம் விற்றவரின் மனைவி, கைக் குழந்தையுடன் வந்து, "புருஷனை போலீஸ் பிடிச்சுக்கிட்டுப் போயிடுச்சு அய்யா!" என்று கதறும்போது உதவ மறுத்து விடுகிறார்.

பொதுவாக வாழ்க்கை வரலாற்றுப் படங்களுக்குத் திரைக்கதை அமைக்கும்போது, எதைக் கொள்வது, எதை விடுவது என்ற குழப்பம் பெரிய தலைவலி தரும். ஆனால் குழப்பம் எதுவுமில்லாமல் காமராஜர் வாழ்வில் நிகழ்ந்த முக்கிய திருப்புமுனை சம்பவங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து நறுக்கென்று திரைக்கதை எழுதியிருக்கும் செம்பூர் ஜெயராஜ், ஜெ.ஃபிரான்சிஸ் கிருபா இருவரும் பாராட்டுக்குரியவர்கள்.

காமராஜ், சத்திய மூர்த்தியால் கவரப்பட்டு காங்கிரசில் சேருவது, சுதந்திரப் போராட்டத்தில் சிறை சென்று திரும்புவது என்று தொடங்குகிறது கதை. பின்னர் காங்கிரஸ் தலைவராகி, முதல்வராகி, அந்தப் பதவியை விட்டு விலகி தேர்தலில் தோல்வியுற்று, எம்.பி தேர்தலில் வென்று, இந்திராவை பிரதமராக்கி, அவர் கொண்டு வந்த நெருக்கடி நிலையைக் கண்டித்து மனம் உடைந்து, மரணமடைவது வரை இப்படியும் ஒரு தலைவர் நம்மிடையே வாழ்ந்தாரா என்று பெருமூச்சு விட வேண்டியிருக்கிறது.

படத்தில் ராஜாஜியை கிட்டத்திட்ட ஒரு வில்லனைப் போல காட்ட, இயக்குனர் முயற்சித்திருப்பது வெளிப்படையாகத் தெரிகிறது. என்றாலும் பல வரலாற்றுச் சம்பவங்களை சினிமா அழகியலுக்காக இயக்குனர் திரிக்காமல் படமாக்கி இருப்பதை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

காமராஜராக நடித்திருக்கும் ரிச்சர்ட் மதுரம், தோற்றம் நடிப்பு இரண்டிலுமே கச்சிதமாக பொருந்தியிருக்கிறார். இவரது நடிப்பை மேலும் உயிருள்ளதாக்கி விடுகிறது, அச்சு அசலாக காமராஜரைப் போல் இவருக்கு குரல் கொடுத்திருக்கும் ஹேமாபாஸ்கரின் திறமை.

"நாடு பார்த்ததுண்டா" என்று பின்னணியில் ஒலிக்கும் பாடலில் உடல் சிலிர்க்க வைக்கிறார் இளையராஜா. எதிர்வரும் தலை முறைகள் காமராஜரை சினிமா மூலமாவது நினைவில் நிறுத்த நல்ல ஆவணம்.

- விஷுவல்தாசன்

• அபவ் ஆவரெஜ்

# ஒரு நாள் திருவிழா!

மொத்தம் பத்தாயிரம் ஆதரவற்ற குழந்தைகள். கண்களில் ஏக்கமும் வறுமையுமாக இருந்த இந்தப் பிஞ்சுகளுக்கு ஒருநாள் திருவிழாவை கிஷ்கிந்தாவில் நடத்தியது 'ராஜஸ்தான் யூத் அசோசியேஷன் மெட்ரோ ட்ரஸ்ட்டின் புட் பேங்க்' அமைப்பு. எல்லோருக்கும் சாப்பாடு, கவலை மறந்து சிறகடிக்க சிறப்பு விளையாட்டுகள், நடிகர், நடிகைகளுடன் கொஞ்சல் என்று கடந்த வாரம் அமர்க்களப்பட்டது கிஷ்கிந்தா! சென்னை மற்றும் அதன் சுற்றுப்புறத்திலுள்ள அனைத்து ஆதரவற்ற குழந்தைகளும் பஸ்களில் இங்கு அழைத்து வரப்பட்டனர். இந்தச் சந்தோஷம் ஒருநாள் மட்டும்தான் என்றபோது பரிதாபமாக இல்லை?

- மிஸ்டர் லீ

படங்கள்: எஸ். ஹரி

**கற்காலம் முதல் கம்ப்யூட்டர் வரை - உலக வரலாறு - ஐ. சண்முகநாதன்**

நூலகமென்றால் உள்ளே பல நூல்களிலிருப்பது மரபு. ஆனால் ஒரு நூலுக்குள்ளே நூலகமொன்றையே அடக்கி விடும்படியான தலைப்பும், அதற்கேற்ற தொகுப்பும் இந்த நூலுக்கு. தோன்றியது முதல் உலகை ஆக்கியவர்களும், ஆண்டவர்களும், விஞ்ஞானிகளும், மெய்ஞானிகளும், கலைகளிலும் காவியங்களிலும் நீந்தியவர்களும், என ஆற்றுக்கு உள்ளதுபோல வரலாற்றுக்கும் படித்துறைகள் பல. ஒவ்வொரு துறைகளிலும் சாதித்தவர்களையும், பாதித்தவர்களையும், உலகுக்குப் போதித்தவர்களையும் பற்றிய ஆராய்ச்சித் தொகுப்பு. நூலை யாத்ததுவும், கோத்ததுவும் ஒருவரா, நூற்றுவரா என மலைக்க வைக்கும் உலகத்தை உள்ளடக்கிய படைப்பு.

**பூம்புகார் பதிப்பகம், 127, பிரகாசம் சாலை, சென்னை - 600 108. விலை. ரூ.390/-**




**பாரதி புகழ் பரப்பிய ராஜாஜி - பெ.சு.மணி**

பாரதியை முதன்முதலாக 'சமூகச் சீர்திருத்தவாதியாக, விடுதலை வீரராக, எல்லாவற்றுக்கும் மேலாக பழுத்த வேதாந்தியாக அடையாளம் கண்டு கொண்டது மட்டுமின்றி, பாரதியின் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, காந்தியின் 'நவ இந்தியா'வில் பிரசுரித்து பரப்பியவர் ராஜாஜி - இப்படி ஆசுகவியையும் ராஜரிஷியையும் இணைத்து நிகழ்ந்தவை பல; காலத்தின் கரங்களிலிருந்து அகழ்ந்தவைகள் சில. கரையேற மனமின்றி கடந்த காலத்திலேயே நீந்தச் செய்யும் தொகுப்பு.

**பூங்கொடி பதிப்பகம், 14, சித்திரைக்குளம் மேற்குத் தெரு, மயிலை, சென்னை - 600 004. விலை ரூ.55/-**

**காலடியில் ஓர் உலகம் - சுப்ர. பாலன்**

வந்ததையும், வாழ்ந்ததையும் இதமாய் வடித்தெடுத்த வார்த்தைச் சரங்கள். இன்னும் மிச்சமிருக்கும் இயற்கையழகு கொஞ்சம், இறையும் அன்புமிருந்தால் குறையேதுமில்லையென்று கொஞ்சம், அனுபவங்களைப் பகிர்ந்து அறிவிப்பவை கொஞ்சம் என்று கனிந்த மனத்திலிருந்து பொழிந்த கவிதைகளின் தொகுப்பு.

**கங்கை புத்தக நிலையம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.30/-**

**தமிழ்த் திரைப்படத் தயாரிப்பாளர்கள் வரலாறு - முக்தா சீனிவாசன்**

திரை கடலைப்போல் ஆழமானதென்பதால்தான் திரையுலகு என்று பெயரிட்டிருக்கிறார்கள். அதில் மூழ்கிய கப்பல்களும், புதையல்களும், விநோதங்களும், விபத்துகளும், ஏராளம். அதில் மூழ்கி முத்துக்குளித்து மீண்டவரும் உண்டு. மூச்சை இழந்து மாண்டவரும் உண்டு. அப்படி தமிழ்த் திரையுலகில் முத்தெடுத்து மீண்டு, அந்தக் கத்தும் கடலை வென்ற தயாரிப்பாளர்களின் வரலாற்றுத் தொகுப்பு.

**தமிழ்த் திரைப்படத் தயாரிப்பாளர்கள் சங்கம், 666, அண்ணாசாலை, சென்னை - 600 006. விலை ரூ.100/-**

**ஆ... - முகில்**

காதலிக்கவும், காதலிக்கப்படவும், ஆதரிக்கவும், எதிர்ப்பவர்க்குப் பதில் சொல்லவும் முற்பட்டிருக்கும் காதற்கவிஞரின் கவிதைகளின் தொகுப்பு. காதல் கொண்ட மனங்கள் காதலிக்கக் கூடிய பதிப்பு.

**துடிப்புகள் பதிப்பகம், 104, என்.ஜி.ஓ. சாலை, தூத்துக்குடி - 2. விலை ரூ.45/-**

- **விஷ்வக்**

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**
Old No. 102, New No. 138, USMAN ROAD,
T. NAGAR, CHENNAI - 600 017.
PH: 24344442, 24327764 TUESDAY HOLIDAY
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**PROPRIETOR : P. RAVINDHIRAN**

எங்கு ஜோதிடம் பார்த்தாலும் **P.R.** ஜுவல்லரிக்கு வந்து ரூ.400/-க்கு ராசிக்கல் வாங்கி பயன் பெறுங்கள். கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.

| ராசி | ராசிக்கல் | வெள்ளி மோதிரம் விலை | |
|---|---|---|---|
| மேஷம், விருச்சிகம் | பவழம் - | 2 CARAT | 400/- |
| ரிஷபம், துலாம் | வைரம் - | 5 CENT | 2250/- |
| மிதுனம், கன்னி | மரகத பச்சை - | 20 CENT | 400/- |
| கடகம் | முத்து - | 2 CARAT | 400/- |
| சிம்மம் | மாணிக்கம் - | 20 CENT | 400/- |
| தனுசு, மீனம் | புஷ்பராகம் - | 1 CARAT | 400/- |
| | கனகபுஷ்பராகம் - | ½ CARAT | 1000/- |
| மகரம், கும்பம் | நீலம் - | 20 CENT | 400/- |



எங்களிடம் நியூமராலஜிபடியும் கல் மோதிரங்கள் கிடைக்கும்.

**TOPAZ, MOONSTONE, AMETHYST, TARQUISE, TIGER EYE, BLOOD STONE, OPAL, AQUAMARINE.**

மதர் மோதிரம், மதர் டாலர் தங்கத்திலும், வெள்ளியிலும் ரெடியாக கிடைக்கும்.

தங்கத்தில் ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 1800/- முதல் 5000/-ம் வரை உடனே கிடைக்கும்.

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபக சக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும்.

தபால் மூலம் மோதிரம் 1க்கு ரூ 450/-

M.O. (or) D.D. அனுப்பவும்.

தபால் எழுதினால் முழு விவர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

குறிப்பு : தினசரி காலை ராஜ் டீவியில் 6.55 மணிக்கு சிறப்புப் பேட்டியை பார்க்கவும்

கடகராசி - முத்து * சிம்மராசி - மாணிக்கம் * தனுசு ராசி, மீனராசி - புஷ்பராகம் * மகரராசி, கும்பராசி - நீலம் *

மேஷ ராசி, விருச்சிக ராசி - பவழம் * ரிஷப ராசி, துலாம் ராசி - வைரம் * மிதுன ராசி, கன்னி ராசி - மரகத பச்சை

தமது கோகுலம் ஹவுஸில் இருந்தார் மக்கள் தமிழ் தேசம் கட்சியின் தலைவர் கண்ணப்பன். கூடவே ஒரு டஜன் கட்சி நிர்வாகிகள்! எல்லோரும் அதிசயமாய் மொக்கராசுவை வேடிக்கைப் பார்க்க, சிலிர்த்த தலையுடன் (வெட்கம்) ஆரம்பித்தார் ராசு.




*சிலம்பம் கத்துக்கிட்டிருக்கீங்க... வீடு கட்டுவீங்களா?*

சுற்றிச் சுற்றி வீடுகட்டுவேன். சிலம்பம் கத்துக்கறது உடல் நலத்துக்காகத்தான். எம்.ஜி.ஆருக்கு அழகிரிசாமி மாஸ்டர் சிலம்பம் சொல்லிக் கொடுத்தார். அவரோட சிஷ்யன் மாடக்குளம் ரவி. இவரோட சிஷ்யன் 'பவர் பாண்டியன்'தான் எனக்கு குரு. எம்.ஜி.ஆர். பல படங்கள்ல சிலம்பம் கத்தியிருக்காரு. அதைப் பார்த்து தான் எனக்கும் ஆர்வம் வந்தது.

*மெதுவாச் சொல்லுங்க. முதன் முதலா உங்ககிட்ட 'ஐ லவ் யூ' சொன்ன பொண்ணு யாரு?*

மெதுவாவே சொல்றேன். காலேஜ் படிக்கும்போது அந்த எண்ணம் இருந்தது. ஆனா யாருமே சொல்லலையே! வருத்தமா இருக்கு.

*ஹாலிவுட் படம். நீங்கதான் ஹீரோ. நாயகியா யாரைத் தேர்ந்தெடுப்பீங்க?*

படம் ஆங்கிலப்படமா இருந்தாலும் நமக்குப் பிடிச்சதெல்லாம் தமிழ், இந்தியா தான். அதனால யாரைச் சொல்லலாம்? ஆங்.... ரீமாசென், ஓ.கே.பா...!

*வெண்ணெய் திருடியிருக்கீங்களா?*

வீட்ல ரொம்பச் செல்லம் எனக்கு. அதனால திருடற வாய்ப்பு இல்லை.

*உறியடிச்சிருக்கீங்களா?*

எங்கிட்டேயே இப்படியொரு கேள்வியா? கிருஷ்ண ஜயந்தி விழாவுல உறியடிக்கறது ஒரு ஜாலியான விஷயம். பல வருடங்கள் உறியடிச்சிருக்கேன்.

*ஏதாவது கட்சி மாநாட்டுக்கு லாரியில போயிருக்கீங்களா?*

நான் எம்.எல்.ஏவாகி அமைச்சராவதற்கு முன்னால, ஒவ்வொரு அ.தி.மு.க. மாநாட்டுக்கும் லாரியிலதான் வந்திருக்கேன். எம்.ஜி.ஆர். அ.தி.மு.கவை ஆரம்பிச்சதும், 'புரட்சிப் பயணம்' வந்தார். அவரோட வேனுக்கு முன்னால 'பைக்'ல பாடிகாட் மாதிரி, தமிழ்நாடு முழுவதும் போயிருக்கேன். நிறைய தடவை லாரியில தொங்கிக்கிட்டும் வந்திருக்கேன். தொங்குறதுலயும் தனி சுகம் இருக்கு ராசு!

*அம்மா, அப்பா - உங்களுக்கு யாரைப் பிடிக்கும்?*

அம்மாவைத்தான். (நம்ம முதல்வர்னு நீங்க நினைச்சா அதை மாற்றிக்கணுமாம்!)

*ரகசியம் காக்கலாமா?*

ஒரு மனுஷன் திறந்த புத்தகமா இருக்கணும். என்ன பெரிய ரகசியம்! ரகசியம்னு எதுவுமில்லை. அது தேவையில்லாததுன்னு நினைக்கிறவன் நான்.

*நீங்க டென்னிஸ் ஆட்டக்காரராமே! செரினா வில்லியம்ஸ் எதிர்ல வந்தா என்ன கேட்பீங்க?*

# தொங்குவதே சுகமான சுகம்!

என் கூட ஒரு ஆட்டம் போடுங்கனேன்னு தான்.

*சினிமாவுல யாரை ரசிக்கிறீங்க?*

நிறையப் பேரை! ஜோதிகாவோட நடிப்பு ரொம்பப் பிடிக்கும். அவங்களோட குறும்பு, கோபம், நல்லா பண்றாங்கயில்லை?

*கோவர்த்தன மலை உங்க கையில இருக்கு, யாரைக் காப்பாற்றுவீங்க?*

இன்னும் வறுமையே வாழ்க்கைன்னு எவ்வளவோ ஒடுக்கப்பட்ட, பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்கள் இருக்காங்க. மக்கள் நலன்ல ஆர்வம் உள்ளவன்கற முறையில, கண்டிப்பா அவங்களைத்தான் காப்பாற்றுவேன்.

*எதைப் பார்த்து முகம் சுழிப்பீங்க?*

நான் எதையுமே ரொம்ப யதார்த்தமா எடுத்துக்கறவன். சீரியஸா பார்க்கறதில்லை. பாருங்களேன், உங்ககிட்டயே நான் ஜாலியாத்தான் பேசிக்கிட்டிருக்கேன். (ஆகா! நம்மளையே போட்டுத் தள்ளிட் டாரேப்பா!)



\- மொக்கராசு

படங்கள்: ஸ்ரீஹரி



# பார்த்த ஞாபகம்

"கண்ணோடு காண்பதெல்லாம்... கண்களுக்குச் சொந்தமில்லை!"

பிரபலமான இந்தத் திரைப்பட வரிகள், மாணவர்களுக்கு ஒரு மகத்தான உண்மையைச் சொல்கின்றன. ஆம்! கண்ணால் பார்த்துப் படிக்கும் விஷயங்கள் எல்லாமே, நினைவில் நிற்பதில்லை என்பதுதான் அது! இதற்கு ஆர்வமின்மை, கவனச் சிதறல், மனக்குழப்பம், கவலை, பயம் போன்றவை முக்கியமான காரணங்கள். எனவே, உங்கள் நினைவாற்றல் சிறப்பாக இருக்க வேண்டுமானால், முதலில் இவற்றை நீக்க வேண்டும்.

நினைவாற்றல் டெக்னிக்குகளைப் பற்றித் தெரிந்து கொள்ளுமுன்பு, எந்த மாதிரியான தகவல்கள் நம் நினைவில் சுலபமாகப் பதிகின்றன என்று பார்ப்போம்:

1. படிக்கும் பாடத்தின் முதற் பகுதி (the primary effect) மற்றும் இறுதிப் பகுதி (the recency effect).

2. பாடத்தில் இருக்கும் பல தகவல்களுள், ஏற்கெனவே நமக்குத் தெரிந்த தகவல்களுடன் தொடர்புடையவை/ ஒத்துப் போகக் கூடியவை.

3. முக்கியத்துவம் வாய்ந்த தகவல்கள்.

4. பார்க்க, கேட்க, சுவைக்க, இனிமையாய் அமையும் தகவல்கள்.

5. நமக்குத் தனிப்பட்ட முறையில் ஆர்வமிருக்கும் தகவல்கள்.

இவையெல்லாம் நம் ஞாபகத்தில் சுலபமாகப் பதிந்து, தேவையான சமயத்தில் 'உடுக்கை இழந்தவன் கை' போல் உதவும்.

ஆனால் இவை மட்டுமின்றி, பல விஷயங்களையும் மாணவர்கள் மட்டுமின்றி மற்றவரும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதற்கு நினைவாற்றலை வளர்த்துக் கொள்வதுதான் ஒரே வழி.

நினைவாற்றல் எல்லோருக்கும் ஒரே மாதிரி இருப்பதில்லை. இயற்கை ஒரு சிலருக்கு மிக அதிகமான நினைவாற்றலை வாரி வழங்கி விடுகிறது. இவர்கள் 'கருவிலே திரு'வுடையவர்கள். இவர்களை supermemory உள்ளவர்கள் என்றழைக்கிறார்கள். இன்னும் சிலரை, நினைவாற்றல் விஷயத்தில் இயற்கை ஏனோ வஞ்சித்து விடுகிறது. இவர்களை சமுதாயம் 'மக்கு' என்று முத்திரை குத்தி விடுகிறது. இந்த இரண்டு எல்லைகளுக்குமிடையே உள்ளவர்களுக்கு இதே இயற்கை, வேண்டிய அளவிற்கு நினைவாற்றலை வழங்கி இருக்கிறது. இப்படிப்பட்ட சராசரி நினைவாற்றல் படைத்த நாம், நினைவாற்றல் டெக்னிக்குகளை முறைப்படி கற்றுக் கொண்டு அவற்றை விடாது பயிற்சி செய்து வந்தால், நம்



மார்க் வாங்கலாம் வாங்க! 10

# இல்லையோ?

பேராசிரியர் ப. இராம்கோபால்

நினைவாற்றல் பன்மடங்கு பெருகும். ஏன், 'மக்கு' என்ற முத்திரை குத்தப்பட்டவர்களைக்கூட, இந்த 'டெக்னிக்'குகள் புத்திசாலிகளாக மாற்றத் தக்கவை. இவற்றை நவீன மூளை மற்றும் நரம்பியல் மருத்துவமும், கல்வி, இயல் நிபுணர்களும் ஒப்புக் கொண்டிருக்கின்றனர்:

**கண் போன போக்கிலே:** (நினைவாற்றல் டெக்னிக்): வீட்டில் ஏதாவது ஓர் அறைக்குப் போங்கள். (வரவேற்பறை/சமையலறை சரியான இடம்) இப்போது கண்களை நாலா பக்கமும் சுழல விடுங்கள். ஒரு இரண்டு நிமிடம். பின்பு அறையை விட்டு வெளியே வந்து, எங்கெங்கு என்னென்ன பொருள்கள் இருந்தன என்று கண்களைமூடி மனத்தில் நினைத்துப் பாருங்கள். வித்தியாசமான, 'பளிச்'சென்று கண்ணில் படும்படியான பொருள் ஏதாவது இருந்ததா என்று நினைத்துப் பாருங்கள். அதற்கு முன்னும், பின்னும், மேலும் கீழும், இடது மற்றும் வலது பக்கங்களில் என்னென்ன இருந்தன என்று யோசியுங்கள். அடுத்தபடியாக ஒரு தாளை எடுத்து, பார்த்த பொருள்களின் பெயர்களை எழுதுங்கள். அல்லது கண்ட காட்சிகளை பென்ஸிலால் வரையுங்கள். இனி பொருள்களைப் பார்த்த அறைக்குச் சென்று, உங்கள் பட்டியல்/படம் எந்த அளவுக்குச் சரி என்று பாருங்கள். இதைத் தொடர்ந்து ஒரு பத்து நாட்களுக்குச் செய்து வாருங்கள். ஒரு சில நிமிடங்களே 'பொருள்களை/சூழ்நிலையை ஊன்றிக் கவனிக்கும் திறனும், நினைவாற்றலும் பன்மடங்கு அதிகரிக்கும்.

சில நாட்களுக்குப் பிறகு, வரவேற்பறை ஷெல்பிலுள்ள புத்தகங்களின் பெயர்கள், தெருவிலுள்ள கடைகள், கடைகளிலுள்ள பொருள்கள்... இப்படி எல்லையை விரிவுபடுத்திக் கொண்டே போகலாம். இதனால் எதையும் கூர்ந்து கவனிக்கும் ஆற்றல் அதிகமாகும். பிற்காலத்தில் இந்த ஆற்றல் வேலை செய்யுமிடத்திலும், சொந்தத் தொழில் செய்யும் போதும், மிக மிக உதவியாக இருக்கும். 'சாரி சார்! அதைக் கவனிக்கலை!' என்ற சொற்கள் பல பெருடைய வேலைகளைப் பாதித்திருக்கின்றன.

போட்டிகள் மிக நிறைந்த இன்றைய உலகில், இந்த power of observation அதிகமிருந்தால், பிறரைக் காட்டிலும் நமக்கு பலம் அதிகம்.

பிரபலமான சில பத்திரிகைகளில் வரும் 'வித்தியாசங்களைக் கண்டு பிடியுங்கள்' பகுதி, இந்தத் திறனை வளர்த்துக் கொள்ள ஒரு நல்ல பயிற்சி.

இன்னொரு நினைவாற்றல் டெக்னிக் அடுத்த வாரம்.

(தொடரும்)

தெலுங்கு தேசத் திரையுலகைக் கலக்கிக் கொண்டிருக்கும் வெற்றிப்பட இயக்குனர் தேஜா, கோலிவுட்டில் குதித்திருக்கிறார்! ராதிகா சரத்குமாரின் ராடான் மீடியா ஒர்க்ஸ் நிறுவனத்திற்காக, நாயகன், நாயகி உட்பட படத்திலுள்ள அத்தனைப் பாத்திரங்களையும் (மொத்தம் ஐம்பத்தைந்து அறிமுகங்கள்) புத்தம் புதிதாக அறிமுகப்படுத்தி, புரட்சி செய்திருக்கும் அந்தப் படத்தின் பெயர் ஜெய்ராம்! இந்திய-பாக் - பிரிவினையை மையமாகக் கொண்ட காதல் கதை. தமிழ், தெலுங்கு மொழிகளில் தயாராகி வரும் இந்தப் படத்தின் பெரும்பகுதிக் காட்சிகள், இந்தியாவில் படம் பிடிக்கப்பட்டு விட்டன. எஞ்சிய முக்கியமான காட்சிகளை பாகிஸ்தானில் உள்ள லாகூர், கராச்சி நகரங்களில் படம் பிடிக்க வேண்டும். இதற்காக இந்திய வெளியுறவு அமைச்சகத்திடம் போராடி அனுமதி பெற்ற இயக்குனர், பாகிஸ்தான் வெளியுறவு அமைச்சகத்திடம் திரைக்கதையைக் கொடுத்து அனுமதி கேட்டு வந்திருக்கிறாராம். 'பாக் - இந்திய கிரிக்கெட் போட்டி நடந்து முடிந்ததும், கட்டாயம் அனுமதி தருகிறோம்' என்று பாக். அதிகாரிகள் உறுதி அளித்திருக்கிறார்களாம்!

வழக்கத்தைவிட கம்பீரமான உடற்கட்டோடு காட்சி அளித்தார் சரத். காக்கிச்சட்டை கதைகளின் தொடர் வெற்றியால், சுடச்சுட காவல் அதிகாரியாக நடித்து முடித்திருக்கும் சரத். 'கம்பீரம்' படத்திற்காகத்தான் உடலை இப்படிச் செதுக்கினாராம்!

"சாதாரண நிலையிலிருக்கிற ஒரு போலீஸ்காரர் படிப்படியா உயர்ந்து, அஸிஸ்டென்ட் கமிஷனராகிறான். அப்போது அவன் சந்திக்கிற பிரச்னைகள், போராட்டங்கள் தான் கதை" என்கிறார் சரத்.

ஒரே நேரத்தில் இவர் நடித்த இரண்டு படங்கள் வெளியாக இருக்கின்றன. ஒன்று 'கம்பீரம்', மற்றொன்று 'மானஸ்தன்'.

"முன்னால 'சூரியனும்', 'அரண்மனைக் காவலன்' படமும் ஒரே சமயத்திலே வெளியாகி இரண்டுமே ஹிட்டாச்சு. அதே போல இப்பவும் அமையும்னு நினைக்கிறேன்" என்கிறார் நம்பிக்கையாக.

• ஜெய்ராம் - ஷூட்டிங்கில் தேஜா



# பாகிஸ்தானில் தமிழ்ப் படம்!



• சேரன்

நீண்ட இடைவெளிக்குப் பிறகு நான்ஸ்டாப் ரொமான்டிக் காமெடியாக வந்து, கேரளத்தைக் கலக்கிய 'மீசா மாதவன்' படத்தை, மீசை மாதவனாக வேகவேகமாய் தமிழில் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நான்கு நாட்களில் முழுப் படத்தை எடுத்து முடிக்க திட்டமிட்டிருக்கிறது. 'பிள்ளையார்பட்டியும் கந்து வட்டியும்' படக்குழு. 'படத்தின் தலைப்பே ரொம்ப வித்தியாசமாக இருக்கிறதே' என்று வினவினால், 'ஹீரோ பாண்டியராஜன், கந்துவட்டி பெண் தாதா ஷர்மிளியிடம் கடன் வாங்கிவிட்டு, படுகிற அவஸ்தைகள்தான் படம். முழுநீள நகைச்சுவைக்கு உத்திரவாதம்'' என்கிறார் கதாநாயகி காயத்ரி ப்ரியா.

மகிழ்ச்சியில் இருக்கிறார் சேரன். ''இருக்காதா? 'ஆட்டோகிராஃபை' ரிலீஸ் பண்ணுகிறவரை, ரசிகர்கள் இதை ஏத்துப்பாங்களா? இல்லை, ஊருக்கே திரும்பவும் போயிடணுமான்னு மனசுக்குள்ளே குடைச்சல். முதல் நாளே நல்ல ரிசல்ட். கடனை அடைச்சிடலாம்னு நம்பிக்கை வந்தது'' என்ற சேரன், ''நல்ல படங்களை ரசிகர்கள் ஒரு போதும் கைவிடறதில்லை. இதே மாதிரியான நல்ல கதைகளை வைத்துக் கொண்டு உதவி இயக்குனர்கள் அலைஞ்ச காலம் உண்டு. அப்ப தயாரிப்பாளர்கள் முன் வரலை. இந்தப் படத்திற்குப் பிறகு, உதவி இயக்குனர்கள் பழைய ஃபைலைத் தூசி தட்டி எடுத்துக்கிட்டிருக்காங்கன்னு கேள்விப்படறதே சந்தோஷமா இருக்கு'' என்கிறார்.

- ரவுண்ட்ஸ்பாய்

• 'பிள்ளையார் பட்டியும் கந்து வட்டியும்' படத்தில் காயத்ரி ப்ரியா

• 'கம்பீரம்' சரத்குமார்



• 'மீசை மாதவன்' ரமணா - குட்டி ராதிகா

காரணம், அதே கதையை உல்டா செய்து வேறு இரண்டு படங்கள் ஆமை வேகத்தில் தயாராகிக் கொண்டிருக்க, ஒரிஜினல் முயல் வேகத்தில் முந்திக் கொள்ள வேண்டும் என்று அவசரம் காட்டுகிறார், படத்தின் தயாரிப்பாளர் கம் நகைச்சுவை நடிகர் தங்கராஜ்.

பழைய நடிகர் விஜயபாபுவின் மகன் ரமணாதான் நாயகன். அவருக்கு ஜோடி குட்டி ராதிகா. ராமு என்ற அறிமுக இயக்குனர், மீசையை முறுக்கியபடி மின்னல் வேகத்தில் படத்தைச் சுட்டுத் தள்ளுகிறார்.

மீசை மாதவன் போலவே இருபத்து

அப்பாவின் அல்சருக்கு டாக்டர் எழுதிக் கொடுத்த மாத்திரைகளை வாங்கிக் கொண்டு, மாதவன் வீட்டுக்குத் திரும்பி வரும் பொழுது தான் அந்தச் சம்பவம் நடந்தது...

மெயின் ரோட்டின் ஓரமாக, கைத்தடி சகிதம் மெல்ல நடந்து சென்று கொண்டிருந்தார் பெரியவர் ஒருவர். அவர் சாலையைக் கடக்க வேண்டும். சற்று நின்று, கவனித்து விட்டுத்தான் நடக்க ஆரம்பித்தார். ஆனால் என்ன செய்ய..? வேகமாக வந்த ஒரு கார், கண் இமைக்கும் நேரத்தில், அந்தப் பெரியவர் மீது உரச, தூக்கியெறியப்பட்டார் அவர். சற்றுத் தூரம் சென்ற பின்னரே அந்தக் கார் நின்றது... டிரைவர் சீட்டிலிருந்து ஓர் இளைஞனின் முகம் தென்பட்டது.... என்ன தோன்றியதோ தெரியவில்லை, அவன் மீண்டும் வேகமாக காரை ஓட்டிச் சென்று விட்டான்!

அந்தக் காட்சியைப் பார்த்து பதறிப்போன மாதவன், ஓடிச் சென்று அந்தப் பெரியவரைத் தூக்கி, சாலையின் ஓரமாக உட்கார வைத்தான். நல்ல காலம், கிழவருக்குத் தலையில் அடியோ, எலும்பு முறிவோ ஏதுமில்லை... சிராய்ப்பு காரணமாக, கை, கால்களில் ரத்தம் வழிந்து கொண்டிருந்தது... அவரைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது... நல்ல காலம், சைக்கிளில் சென்று கொண்டிருந்த சிறுவன் ஒருவன் துணைக்கு வந்தான். இருவருமாக, அவரை ஆட்டோவில் ஏற்றி, அருகிலுள்ள நர்சிங்ஹோமிற்கு அழைத்துச் சென்று, காயத்திற்கு மருந்தும், ஊசியும் போட்டனர். பெரியவர் மீண்டும் நிதானத்திற்கு வர, ஒரு மணி நேரமாயிற்று. பிறகு அவரைப் பற்றி விவரங்களைக் கேட்டு, ஆட்டோவில் ஏற்றி வீட்டுக்கு அனுப்பி வைத்தான்.

''அங்கிள்... நான் சைக்கிளில் கூடவே அவரது வீட்டிற்கு சென்று, 'பயப்பட ஒன்றுமில்லை' என்று சொல்லிவிட்டு



# வேகம்

க. ஒப்பிலி அப்பன்

வருகிறேன்..." என்றான் அந்தச் சிறுவன்.

மறுநாள் யதேச்சையாக அந்தச் சிறுவனை வழியில் பார்த்தான் மாதவன்.

"ரொம்ப ரொம்ப தேங்க்ஸ் தம்பீ... நேத்து உன்னோட ஹெல்புக்கு...!"

"அதவிடுங்க சார்... அந்தப் பெரியவர் மீது மோதின கார் ஓனரோட அட்ரஸ் எனக்குத் தெரியும்."

"அப்படியா....? எனக்குக் காட்டு, நேர்ல போய் நாலு வார்த்தை கேட்கறேன்..." என்ற மாதவன், அந்தச் சிறுவனுடன் புறப்பட்டான்.

அந்தப் பெரிய பங்களாவை ஒரு கணம் வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்த மாதவன், சற்றுத் தயக்கத்துடனேயே அந்தச் சிறுவனுடன் பங்களாவிற்குள் நுழைந்தான். போர்டிகோவில் அதே நீல நிறக் கார் நின்று கொண்டிருந்தது.

பங்களாவிற்குள்ளிலிருந்து, நடுத்தர வயதைத் தாண்டிய ஒரு பெரியவர், "யாரு? உங்களுக்கு என்ன வேணும்?" என்றார் அதட்டலான குரலில்!

அவர் ஒரு தொழிலதிபராகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்த மாதவன், "சார்... ரெண்டு நாளுக்கு முன்பு, ஒரு வயசான பெரியவரை இந்தக் கார் தள்ளிவிட்டதுமில்லாமல், நிற்காமலும் போய் விட்டது... ஏன் சார்... காரை இப்படியா கண் மண் தெரியாம வேகமா ஓட்டறது...?" என்றான் சற்றே கோபமாக...

"மிஸ்டர்... என் மகனுக்கு நான் வாங்கிக் கொடுத்தது கார்... கட்டைவண்டியில்லே..." என்றவரின் பேச்சைக் கேட்டு அதிர்ச்சியடைந்தான் மாதவன்...!

இதற்குள் அவரோட மகனும் வெளியில் வந்து, "என்ன சார்....? வயசானவர்ன்னு சொல்றீங்க..? எதுக்கு ரோடுல இப்படித் தனியா, துணையில்லாம வரணும்.... 'ரிஸ்க் தானே இது..?" என்றான் தன் பங்கிற்கு.

'அப்பாவுக்கு ஏத்த பிள்ளைத் தப்பாமல் பிறந்திருக்கான்..' என்று நினைத்துக் கொண்ட மாதவன், இனி இவர்களுடன் பேசுவதில் அர்த்தமில்லை என்று, அந்தச் சிறுவனுடன் வெளியேறினான்...!

ஒரு மாதத்திற்குப் பிறகு....

மாதவனின் தந்தைக்குத் திடீரென்று ஒரு நாள் நெஞ்சு வலி. அவரை நர்சிங்ஹோமிற்கு அழைத்து வந்தவன், ஈ.சி.ஜி., எக்கோ என்று டெஸ்டுகளை எடுக்க தந்தையுடன் அங்கு மிங்கும் அலைந்து கொண்டிருந்த போதுதான் அவரைப் பார்த்தான்...

ஒரு மாதத்திற்கு முன்பு காரில் அடிபட்ட அதே பெரியவர்...!

"ஐயா... நீங்களா...? இங்கு எப்படி...? மறுபடியும் ஏதாவது விபத்..." மாதவன் முடிக்கவில்லை, மெல்ல தலையை நிமிர்த்தி அவனைப் பார்த்த அந்த முதியவர், "ஓ... தம்பீ... நீங்களா...! எனக்கு ஒன்றுமில்லை... நானும் என் மகனும் எங்க உறவுக்காரர் ஒருத்தரைப் பார்க்க, ஆட்டோவுல போய்க்கிட்டிருந்தோம்... இந்த ஆஸ்பத்திரிகிட்ட வரும் போதுதான் ஒரு விபத்து...!"

"விபத்தா... உங்க மகனுக்கு எதாச்சும்...!"

"இல்ல தம்பி... ஒரு காரும் டாங்கர் லாரியும் நேருக்கு நேர் மோதி, கார்ல இருந்த தம்பிக்கு மண்டையில அடி... மயக்கமாயிட்டான்... என் மவன்தான் அந்தத் தம்பிய நாங்க வந்த ஆட்டோவுலயே தூக்கிட்டு வந்து, இங்கே சேர்த்தான்... என் மடியிலதான் அந்தத் தம்பியப் போட்டுக்கிட்டு வந்தேன்... நேரமாகியிருந்தா அதிக ரத்தம் வீணாகி உயிருக்கே ஆபத்து ஏற்பட்டிருக்கும்னு டாக்டர் சொன்னாராம்... இதுல ஒரு சந்தோஷம் என்னென்னா, என் மவனோட ரத்தமும், அந்தத் தம்பியோட ரத்தமும் ஒண்ணாம்... அதான் ரத்தம் எடுக்க என் மகனை அழைச் சுக்கிட்டுப் போயிருக்காங்க..." என்றார் அவர்...

அந்தச் சமயத்தில்தான், ஐ.சி.யூனிட்டிலிருந்து வேகமாக வந்த அந்தப் பிரமுகர், முதியவரின் அருகே வந்ததும், அவரது இரண்டு கைகளையும் ஆதங்கத்துடன் பிடித்துக் கொண்டு, பேச முடியாமல் கண்ணீர் விட்டார்.

"என் பையனைக் காப்பாத்திட்டீங்க..."

மாதவன் அந்தப் பிரமுகரைப் பார்த்ததும், திகைத்துப் போனான்...! அவர் வேறு யாருமல்ல... அதே தொழிலதிபர் தான்...!

தெய்வத் தமிழ் நாட்டினிலே 20

# ஆட்கொண்ட சுடர்க்கொழுந்தீசர்; அருள்பொழியும் அழகிய காதலி!

தேவலோகத்து கந்தர்வப் பெண்கள் இந்திரனுடைய நித்திய பூஜைக்குப் பூப் பறித்து வரக் கூடையுடன் நந்தவனத்தில் புகுந்தார்களாம். அன்று ஒரிரு பூக்கள் கூட பூக்கவில்லை! "சரி! பூலோகத்தில் வெள்ளாற்றின் கரையில் உள்ள திருக்கடந்தை கோயில் நந்தவனம் பூத்துக் குலுங்கும்; அங்கே போய் பறித்து வரலாம்" என்று வந்து விட்டார்கள். மலர்களைப் பறித்துக் கூடையை நிரப்பிக் கொண்டு கிளம்ப நினைத்தபோது, அங்கே இருந்த சிவலிங்கத்தைக் கண்டார்கள். அவ்வளவுதான். மற்றதெல்லாவற்றையும் மறந்து கூடைப்புஷ்பத்தையும் சர்வேசுவரனுக்கு அர்ப்பணித்து விட்டு அங்கேயே இருந்து விட்டார்கள்.

இந்திரனுக்குக் கோபமான கோபம். காமதேனுவை அனுப்பி அவர்களைத் தேடச் சொன்னான். கடந்தைக்கு வந்த காமதேனுவும், சிவ பெருமான் மீது பக்தி கொண்டு பாலைப் பொழிந்தது. இந்திரனின் சீற்றம் அதிகரித்தது. ஐராவதத்தை அனுப்பினான். ஐராவதம் எங்கெங்கோ திரிந்து, கடைசியில் பசியுடன் கரும்பும், வாழையும், நெல் வயல்களும் செழிக்கும் கடம்பைக்கு வந்து, கரும்பை ஒடிக்க ஆரம்பித்தது. சற்றுத் தூரத்தில் தேவ மங்கையர்களும், காமதேனுவும், சிவபூஜை செய்வதைப் பார்த்து விட்டது. "அடடா! சர்வேச்வரன் இப்படி வெட்ட வெளியில் வெயிலில் வீற்றிருக்கிறாரே!" என்று உள்ளம் உருகி, தன் கால்களே தூண்களாகத் தன் உடலே விமானமாக, சிவலிங்கத்தின் மீது வெயில் படாதபடி நின்று கொண்டது. பெண்-ஆ-கடம், மூவரும் இந்த ஈசனை வழிபட்டபடியால், இந்த இடத்துக்கே பெண்ணாகடம் என்ற பெயர் நிலைத்து விட்டது. கோபத்தோடு வந்த இந்திரன், கடந்தைவன ஈசனையே பூஜித்து ஆனந்தம் அடைந்தான். இன்றும் கடந்தை பிரளய காலேசுவரர் கோயில் விமானம், வெள்ளை வாரண முகத்துடன் தூங்கானை மாடமாகத் திகழ்வதைக் காணலாம்.


ஸ்ரீ பிரளயகாலேசுவரர் கடர்க் கொழுந்தீசர்

# ஆணந்தி

இன்னொரு கதை. ஒரு காலத்தில் பிரளயம் பொங்கி வந்தது. வெள்ளாறு தென்பெண்ணை நதிகளுக்கு மத்தியில் இருந்த நடுநாடு மட்டும் தண்ணீரில் மூழ்க வில்லை. தேவர்கள் சிவபெருமானுடைய பெருமையை உணர்ந்து வழிபட்டார்கள். உலகைக் காப்பாற்றுமாறு வேண்டிக் கொண்டார்கள். ஈசன், நந்தியிடம் "பெருகும் பிரளய நீரை வற்றும்படி செய்!" என்று



• ஸ்ரீ ஆமோதனாம்பாள்

கட்டளை இட்டார். உடனே நந்தி திரும்பி நின்றார். அத்தனை வெள்ளத்தையும் உறிஞ்சிக் குடித்து விட்டார். உலகம் பிழைத்தது! அன்றிலிருந்து நந்தி பகவான் கருவறையைப் பார்த்து வீற்றிராமல், திரும்பியபடியே வாயிலைப் பார்த்து வீற்றிருக்கிறார். இவருக்குப் பயந்துதானோ என்னமோ, வெள்ளாறு இன்றும் அடங்கி ஒடுங்கிக் கிடக்கிறது! கருவறையின் எதிரே உள்ள சிறிய நந்தியும் வாயிலைப் பார்த்து அமைந்திருக்கிறது.

இயற்கைச் சூழலில் அமைந்துள்ள அழகான கோயில், உயர்ந்த மதில்களும், உயர்ந்த மரங்களுமாக உயர்ந்து நிற்கிறது. தேவாரப் பெயர் திருக்கடந்தை. தலவிருக்ஷம் சண்பகம்.

திருக்கடந்தை பிரளயகாலேசுவரரை சுடர்க் கொழுந்தீசர் என்ற மிக அழகான பெயரால் சிவபுராணம் அழைக்கிறது.

"தூங்கானை மாடம் சுடர்க் கொழுந்தீசர் பால்
ஓங்கும் கடந்தை மா நுலமை வெள்ளாறு."

நந்தவனத்தில் தேவ கன்னியர் பூக்கொய்து அர்ச்சித்ததை நினைவூட்டும் வகையில், புஷ்பவனேசுவரர் என்றும் பெயர்.

கோயில் கருவறை காற்றோட்டமும் வெளிச்சமும் உள்ளதாக இருப்பதைக் காண்கிறோம். மூன்று பக்கமும் பல கணிகள் அமைக்கப்பட்டிருப்பதைக் கண்டு வியக்கிறோம். இந்த அமைப்பு வேறு எந்தக் கோயிலிலாவது உண்டா என்று தெரியவில்லை. ஈசன் நல்ல காற்றோட்டமான கருவறையில் வீற்றிருக்கிறார். இந்தக் கோயில் கோச்செங்கட் சோழ மன்னரால் கருங்கல் திருப்பணி செய்யப் பட்டது என்று அறிகிறோம். சம்பந்தர் பெருமான், "பெண்ணாகடத்துப் பெருங் கோயில்" என்று பாடுகிறார்.

சித்திரை மாதத் திருவிழா மிகச் சிறப்பாக நடக்கும். ஐந்தாவது நாளன்று,

ஆனால், நமக்குச் சுலபமாகக் காட்சி தர மாட்டார். சரியான சமயத்தில் (கோயில் திறந்திருக்கும்போது) போனால்தான் தரிசனம் கிடைக்கும்.

சிவஞானபோதம் இயற்றி, சைவம் தழைக்கச் செய்த மெய்கண்டார் பிறந்த ஊர் இது. இவருடைய குரு பரஞ்சோதி முனிவர். மெய் கண்டார், குருவை மிஞ்சிய சீடர். அவருக்கும் சீடர்கள் இருந்தார்கள். அருணந்தி சிவாச்சாரியார், உமாபதி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்தர், என்று மெய்கண்டாரின் சந்தான பரம்பரை நீடித்து, சைவ சமயத்துக்குத் தொண்டு செய்தது வரலாறு. இந்த மகான்கள் எல்லாரும் பெண்ணாகடத்துப் பெருமானை வழி பட்டிருக்கிறார்கள். சைவ மடங்கள் தமிழ் நாட்டில் தோன்றி பக்தி நெறியை வளர்த்தன.



• ஸ்ரீ ஆமோதனாம்பாள் விமானம்



• கஜபிருஷ்ட விமானம்

திருநாவுக்கரசருக்கு சூல, ரிஷப முத்திரைகளைத் தோளில் பொறித்த நிகழ்ச்சி நடைபெறும்.

நாவுக்கரசர் பெருமான் திருக்கடந்தைக்கு வந்தபோது,

*"பொன்னார் திருவடிக்கொன்றுண்டு*
*விண்ணப்பம் போற்றி செய்யும்*
*என்னாவி காப்பதற் கிச்சையுண்*
*டேல் இருங் கூற்றகல*
*மின்னாரு "மூவிலைச் சூலம் என்*
*மேல் பொறி"மேவு கொண்டல்*
*துன்னார் கடந்தையுள் தூங்கானை*
*மாடச் சுடர்க் கொழுந்தே"*

என்று வேண்டினார். அவருடைய தோள்களில் இந்த இரு சிவச் சின்னங்களும் தோன்றின. சுடர்க் கொழுந்தீசரே பொறித்து விட்டார்.

கோவிலுக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு கட்டுமலைக் கோயில் இருக்கிறது. சோழ மன்னர் சிவதரிசனத்துக்காக வந்தபோது, வெள்ளாற்றில் பெரு வெள்ளம் ஓடியதாம். கடந்து வர முடியாமல் வருந்தினார். பக்தனுடைய அன்புக்கு இரங்கி, ஈசன் தன் இருப்பிடத்தை உயர்த்திக் கொண்டே வந்து, அக்கரையிலிருந்தே தரிசன பாக்கியம் அளித்தாராம். மைத்துனனுக்குப் போட்டியாக, 'சௌந்தரேசுவரர்' என்று பெயரைத் தாங்குகிறார் கிழக்கு நோக்கிக் காட்சி தரும் சிவபெருமான். சௌந்தரவல்லி என்ற பெண்ணுக்குக் கடை வீதியிலிருந்தே தரிசனம் தந்ததால், சௌந்தரேசுவரர் என்று பெயர் வந்ததாகவும் செவி வழிச் செய்தி.

கலிக்கம்ப நாயனார் பிறந்து சிவனடியார்களுக்குத் தொண்டு செய்ததும் இங்கே தான். ஒரு காலத்தில் பத்து தீர்த்தங்கள் இருந்தனவாம். கோயிலின் எதிரில் உள்ளது பரமானந்த தீர்த்தம்.

கோயிலை வலம் வரும்போது தக்ஷிணா மூர்த்தியை வணங்கி, கோடி விநாயகரைக் கண்டு குட்டிக் கொண்டு, நால்வரைத் தொழுது மெய்கண்டார், மறை ஞான சம்பந்தர், சேக்கிழார் எல்லாரையும் துதித்து, துர்க்கையின் சந்நிதிக்கு வரலாம். இந்தக் கோயிலிலுள்ள துர்க்கை சக்தி வாய்ந்தவள். வெள்ளிக்கிழமை ராகு காலத்தில் விளக்கேற்றி வழிபட்டால், எல்லா இடர்களையும் களைவாள் என்பது அன்பர்களின் நம்பிக்கை. துர்க்கையம்மனுக்குத் தனிச் சந்நிதி இருப்பது இந்தக் கோயிலின் சிறப்பு.

அருள்மிகு ஆமோதனாம்பாள், கடந்தை நாயகி, அழகிய காதலி என்றெல்லாம் அழகிய பெயர்களை உடைய அம்மன் சந்நிதி. அம்பிகை இங்கு வேள்வி செய்து ஈசனை அடைந்ததாகத் தல வரலாறு. சுடர்க் கொழுந்து நாதரின் மனத்தை மயக்கிய அழகிய காதலி அம்பிகையைச்

சரணடைந்தால் அதிக வரம் பெறலாம்.

அழகிய காதலியைப் பற்றிய பாடல், திருக்கடந்தைப் புராணத்தில் வாழ்த்தாகப் பாடப்பட்டிருக்கிறது. சிவஞானப்பிரான் என்ற பக்தர் எழுதிய தலபுராணம்,

*திருமுகமும் விழிமூன்றும் செய்ய வாயும்*
*செறி நகையும் குழைக் காதும்*
*அமுத வாக்கும்*
*புருவமுடன் கருங்குழலும் நாசி கண்டம்*
*புய நான்கும் அணிப்பூணும்*
*புவனம் தந்த*
*மருவு திருமணி வயிறும் வயங்கித்*
*தோன்ற*
*மன்று திருக் கடந்தை அரன்*
*வாம மேவும்*
*அருள் பொழியும் அழகிய காதலி*
*பாதத்தை*
*அனுதினமும் அன்போடு வணங்கி*
*வாழ்வாம்!*

அனுதினமும் வணங்குவதாலேயே நல்வாழ்வு கிடைத்து விடும். அழகியாதலால், கேசாதி பாதம் வருணித்திருக்கிறார். அழகு என்பது அருள்தானே, அமுதமயமான வாக்குடைய கடந்தைநாயகி, ஈசனின் காதல்.

பல மண்டபங்கள் உள்ள கோயில். பிரளய காலேசுவரர் சந்நிதியில் மண்டபத்துக்குள் மண்டபமாகத் தூண்களுடன் கட்டப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம்.

பெண்ணாகடத்தில் பரிமள ரங்கநாதர் கோயிலும் இருக்கிறது. நேரமுள்ளவர்கள் சென்று தரிசிக்கலாம். இரண்டு கோயில்களிலும் ஏராளமான கல்வெட்டுகள் உள்ளன. வரலாற்றுச் சிறப்புமிக்க தலம்.

பெண்ணாகடம் என்றே புகைவண்டி நிலையம் இருக்கிறது. திருச்சி போகும் ரயில் பாதையில், விருத்தாசலத்தில் இறங்கியும் இந்தக் கோயிலுக்குச் செல்லலாம்.

சேக்கிழார் பெருமான், பெரிய புராணத்தில், பெண்ணாகடத்துப் பெருமானை "தீங்கு நீங்குவிர் தொழுமின்கள்" என்று ஞானசம்பந்தர் பாடியதாகச் சொல்கிறார்.

தீங்கு நீங்கும் தருணம் வந்து விட்டால், சுடர்க் கொழுந்தீசரைத் தரிசிக்கும் வாய்ப்பும், பாக்கியமும் தானாகவே வந்து சேரும். அவனருளால்தானே, அவனை வணங்க முடியும்?

(தொடரும்)

## சவப்பெட்டியில் ஒரு பூந்தொட்டி!

அடேங்கப்பா என்று ஆச்சர்யப்பட வைக்கிறார், அமெரிக்க வாழ் இந்தியரான ஹர்பன்ஸ்குமார் மிக்கி. ஹாலிவுட்டில் தயாரிப்பாளர் மற்றும் விநியோகஸ்தராக விளங்கி வரும் இந்த அறுபது வயதுக்காரர், கடந்த ஆண்டு கான்ஸ் திரைப்பட விழாவில் 'Plots with a View' என்ற ஆங்கிலப்படத்தைப் பார்த்து நெகிழ்ந்து போய் அழுதிருக்கிறார். முழுக்க முழுக்க பாசம், அன்பு, காதல், தாய்மை என்று இந்தியத் தன்மையோடு இருந்ததுதான் மிக்கியின் எக்கச்சக்க அழுகைக்குக் காரணம். இத்தனை அருமையான படத்தைத் திரைப்பட விழாவோடு விட்டு விடுவதா என்று நினைத்த மிக்கி, படத்தின் உரிமையை வாங்கி, தமிழில் 'அன்பே சுகம்' என்று தலைப்பிட்டு மொழி மாற்றம் செய்ததோடு நிற்கவில்லை. படத்தில் ஐந்து பாடல்களுக்கு அருமையான சூழ்நிலைகள் அமைந்திருப்பதைப் பார்த்து, கோபால்ராவ் என்ற இளம் இசையமைப்பாளரைக் கொண்டு, ஐந்து பாடல்களைச் சேர்த்து புரட்சி செய்து விட்டார்! கன்னத்தில் முத்தமிட்டால் பாடலைப் பாடிய சின்மயி பாடல்களைப் பாடியிருக்கிறார். ஆங்கிலப்படத்திற்குத் தமிழ்ப் பாடல்கள் எழுதிய அந்த அதிர்ஷ்டசாலிக் கவிஞர் காதல்மதி. "சவப்பெட்டியில் ஒரு பூந்தொட்டி மலருது" என்று தொடங்குகிற டைட்டில் பாடலே வசீகரிக்கிறது.


• ஒலிப்பதிவுக் கூடத்தில் மிக்கி...

- ஜெ



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

***முதியோர் சேவை பெரியது!***

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

### Charitable Trust (Reg)

# 50 / 88, Panchali Amman Kovil Street, Arumbakkam, Chennai - 600 108.
(Near Panchali Amman Temple) Tel. Off: 044 - 2475 5700, 2475 1356, 2475 6700, 2475 5799

E-mail:svhome@vsnl.net

---



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
89, (பு.எண் 42) காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம்-612 001.
E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocities.com/gdpskmu

☎ : (0435)
Off : 2425948
Fax : 2423777
Patasala : 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 462 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 150 மாணவர்களுக்கு 14 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், க்ருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஶ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். *புதிய பாடசாலை கட்டிட நிர்மாணப்பணி (ரூ. 80 லக்ஷம்) நிறைவடையும் தருவாயில் உள்ளது. நன்கொடை வரவேற்கப்படுகிறது.*

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி *'Corpus Fund' |
|---|---|---|
| *ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை)* | Rs. 500 | Rs. 8,000 |
| *அமாவாஸ்யை* (or) *பௌர்ணமி* (or) *க்ருஷ்ண* (or) *சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு* [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| *வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு* ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs.2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D./ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

## மார்க் போடு தலைவா!

பழைய எம்.பிக்கள் இரண்டு பேரைக் கழற்றிவிட்டு வேட்பாளர்களை அறிவித்திருக்கும் டாக்டரய்யா, இந்த வார வாசகர்கள் மார்க் லிஸ்டில்!

"அய்யாவை ஏன் இன்னும் மார்க் லிஸ்ட்ல கொண்டு வரலை?'' என்று கோபமாகக் கடிதம் எழுதிய வாசகர்களுக்கு, வந்தாரய்யா டாக்டரய்யா!

உங்கள் மதிப்பில் அய்யா எப்படி?

கச்சிதமா கணிச்சு, அனுப்பி வையுங்க. முழு முகவரி முக்கியம். சிறந்த முறையில் மதிப்பெண் போட்டவங்களுக்கு டிக்கெட் தரப்படும். நான்கு பேர் அடங்கிய குடும்பத்துக்கு சினிமா டிக்கெட். உறையின் மீது 'மாண்புமிகு டாப்டென் - 7' என்று குறிப்பிடவும்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

கடைசித் தேதி: **21.3.2004**



# வந்தாரய்யா டாக்டரய்யா!

| | தகுதி | முழு மதிப்பெண் | ராமதாஸ் பெற்றது |
|---|---|---|---|
| 1. | தலைமைப் பண்பு (லீடர்ஷிப் குவாலிடி, வசீகரம்) | 10 | |
| 2. | முடிவெடுக்கும் திறன் | 10 | |
| 3. | கறைபடாத கரங்கள் | 10 | |
| 4. | அரசியல் சாணக்கியம் | 10 | |
| 5. | மனிதநேயம் | 10 | |
| 6. | தொண்டர்களோடு தோழமை | 10 | |
| 7. | மேடைப் பேச்சு | 10 | |
| 8. | மாற்றுக் கட்சியினரை மதிக்கும் போக்கு | 10 | |
| 9. | தனி மனித ஒழுக்கம் | 10 | |
| 10. | நிர்வாகத் திறமை | 10 | |
| | மொத்தம் | 100 | |

மாண்புமிகு டாப் டென் - 7

பெயர் : ..................

முகவரி : ..................

● ரேவதி ப்ரியன், ஈரோடு -1

? காஞ்சிப் பட்டு, செட்டிநாடு சிக்கன், ஆந்திரா ஆவக்காய், தமிழ்நாட்டு இட்லி · இவற்றோடு எந்த வெளி நாட்டி னராலும் போட்டிபோட முடியாது என்கிறாரே வெங்கையா நாயுடு...?

! "அர்த்தமுள்ள கூட்டணியே, அம்மா கதை சட்டினியே" என்கிறார் நடிகர் நெப் போலியன். சரியான தினிக் கும்பல்களுக் கிடையே பசியுடன் வாக்காளன் அம்புட்டுக் கிட்டானே!

● கே.எம். ஸ்வீட் முருகன், கரடி கொல்லப்பட்டி.

? மணிரத்னம் இயக்கும் ஆயுத எழுத்து மூலம் ஏ.ஆர்.ரஹ்மான் மீண்டும் பரபரப் பாகப் பேசப்படுவாரா...?

! மணி, வைர, ரகுமான் காம்பினேஷன் என்றுமே சோடை போனதில்லை. (படத் தின் பெயர் 'ஆயுத எழுத்து அல்ல; ஆய்த எழுத்து!)

● பா. செந்தில்குமார், கும்பகோணம்

? பாலிவுட் ஸ்டாரெல்லாம் பா.ஜ.க.வில் தஞ்சம் புகுந்து வருவதால் இனி பாலிவுட் ஜனதா கட்சி என்று பெயர் மாற்றி விடலாமா...?

! ஜாலி, குட் ஐடியா!

● ஜே.டி. ஆனந்தன், மதுரை - 5

? வேலை நிறுத்தத் தடையை எதிர்த்து இந்தியா முழுவதும் வேலை நிறுத்தம் செய்தது சரியா?...

! கதவடைப்பு; வேலை நிறுத்தம் போன்ற ஆயுதங்களைத் தாறுமாறாகப் பயன்படுத்தக் கூடாது என்பது வேறு; அந்த உரிமையே இடையாது என்று கூறுவது வேறு. பின்னதை ஒப்புக் கொள்ள முடியாது. முன்னது நியாயமானது.

● ப.கா. மணிமொழியன், நாகமலை

? பிள்ளையைக் கிள்ளிவிட்டுத் தொட்டி லையும் ஆட்டுவதுபோல், பேசுகிறாரே கபில்தேவ்...? (தாய்நாட்டுக்காக விளை யாடச் செல்லும் வீரர்கள் மற்ற எதையும் பொருட்படுத்தக் கூடாது, துடிப்பாக ஆடவேண்டும் என்கிறார்; பாக் செல்ல விரும்பாத வீரர்களை கிரிக்கெட் வாரியம் கட்டாயப்படுத்தக் கூடாது என்றும் சொல்கிறார்!)

தயங்குவோரிடம் எப்படித் துடிப்பை எதிர்பார்க்க முடியும் ஸாரே...? அதனால் தான் அப்படிச் சொல்கிறார். தூங்கற குழந்தைக்குத் தொட்டில் ஆட்டுவோம்; விளையாடத் துடிக்கும் குழந்தையை வெளியே தவழ விடுவோம் என்கிறார்.




நீங்கள் கேட்டவை-தராசு

● ஆர்.கோபாலன், சென்னை - 33

? 'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்!' என்று பெரியவர்கள் கூறும் பதி னாறு என்னென்ன சார்...?

! இரண்டு குடம் போர்வெல் தண்ணீர், மெடிக்கல் இன்ஷுரன்ஸ், எல்.ஐ.சி.பாலிசி, வரிச்சுமை ஏற்றாத அரசு, டிவோர்ஸ் கேட்காத கணவன் / மனைவி, டிராஃபிக் இல்லாத ரோடு, பிளாஸ்டிக் இல்லாத பூமி, தானே ஹோம் ஒர்க் செய்யும் குழந்தை, ஏமாற்றாத அரசியல்வாதி, உயராத விலை வாசி... (உங்க இஷ்டத்துக்குச் சிலது

சேர்த்துக்குங்க!)

● ப. இராம் முருகன், சிவகங்கை.

? "வைகோ என்றால் உறுதி என்று பொருள்" என்கிறாரே வைகோ...?

! நல்லது. அதற்காக, கலிங்கப்பட்டி கூட்டத்தில் பேசும்போது, 'நான் நினைத்தால் என் தொண்டர்களை வன்முறையில் ஈடுபடுத்தியிருக்க முடியும்... ஆனால் அவ்வாறு செய்யவில்லை" என்று தேவையற்ற முழக்கம் செய்திருக்க வேண்டாம்! பொறுப்புள்ள தலைவர்கள், ஆபத்தான சிந்தனைக்கு இடம் தரமாட்டார்கள்.

● எஸ்.ஜோதி, வேலூர் - 1

? தமிழக முதல்வர் குறித்து பல விமர்சனங்கள் எழுந்தாலும், 'யாருக்கும் வளைந்து கொடுக்காத இரும்பு மனுஷி' என்ற இமேஜ் இருந்தது. இப்போது பல சட்டங்கள், உத்தரவுகளை வாபஸ் செய்ததன் மூலம், அந்த 'இமேஜ்' உடைந்து விட்டதே...?

தேர்தலையொட்டி கீழே இறங்கி வருகிறவர், தேர்தல் முடிந்ததும் மீண்டும் பால்கனி ஏறி விடுவார்.

● பி.கே.வரதராஜன்,

ஹைதராபாத் - 47. ❑

? சாமியார்கள், பூஜாரிகள், புரோகிதர்கள், வாஸ்து, எண்கள், பெயர் ராசி, கற்கள் போன்றவை கொண்டு பலன் சொல்வது - இவ்விஷயங்களுக்கு இன்று கிடைக்கும் பணமும் புகழும் மரியாதையும் செல்வாக்கும் 1990களில் இருந்ததாகத் தெரியவில்லை. இந்த மாற்றம் எவ்வாறு ஏற்பட்டது?

! பொது வாழ்வில் இருப்பவர்களும் பிரபலங்களும் இந்த நம்பிக்கைகளைப் பிரகடனப்படுத்துகிறபோது, மக்களும் ஈர்க்கப்பட்டு விடுகிறார்கள். மீடியாவும் மிக அதிகமாக இவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பிரபலப்படுத்துகிறது. உழைப்புக்கும் ஈடுபாடுக்கும் தரவேண்டிய மதிப்பு, அதிர்ஷ்டத்துக்கும் பரிகாரத்துக்கும் தரப்படுகிறது. இது அபாயமான பிற்போக்குவாதம்; அடிப்படைவாதத்தின் ஒரு கிளையம்சமும் கூட.

● வே. ந. கதிர்வேல், வேலூர் - 6

? முஸ்லிம்களுக்கு பா.ஜ.க. மீதிருந்த தேவையற்ற பயம் மறைந்து வருகிறது; அவநம்பிக்கை குறைந்து விட்டது; பா.ஜ.க. கண்ணோட்டத்தை அவர்கள் புரிந்து கொள்ளத் தொடங்கிவிட்டார்கள்; பா.ஜ.கவில் அதிக அளவில் சேருகிறார்கள்" என்று அருண் ஜெட்லி சொல்கிறாரே...?

! இன்ஷா அல்லாஹ்!

# பாலிவுட் ஜங்கம் என்று பெயர் மாற்றினால் என்ன?

● த. சத்திரநாராயணன், சென்னை - 38

? தி.மு.கவின் விருதுநகர் மாநாடு எப்படி...?

! கூட்டம் என்னவோ பிரமாதம்தான். ஆனால் தேர்தல் அறிக்கை வெறும் விருதா!

● பி.எஸ்.ஆர். சுந்தர், உரையூர்

? வைகோ தேர்தலில் நிற்கப் போவதில்லை; ம.தி.மு.க. அமைச்சரவையில் இடம்பெறப்போவதில்லை என முடிவெடுத்திருப்பது சரியா...?

! கூட்டணி அமைச்சரவையில் இருந்து, அவ்வப்போது நடக்கும் தவறுகளுக்குக் கெட்ட பெயர் வாங்கிக் கொள்வதைவிட, வெளியே இருந்து ஆதரவு தருவதன் மூலம் நிறையவே காரியங்கள் சாதித்துக் கொள்ளலாம் என்ற ரகசியத்தை, சந்திரபாபு நாயுடு கற்றுக் கொடுத்ததன் பலன்தான் தி.மு.க., ம.தி.மு.க. நிலைப்பாடு மாறக் காரணம்.

❑ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

பி.கே. வரதராஜன்,
ஃபிளாட் 203, இரண்டாவது மாடி,
'எஸ்.வி.'ஸ் ரமணா பாரடைஸ்,
கிழக்கு ஆனந்த் பாக், மதுஞ்கிரி,
ஹைதராபாத் - 500 047

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:

கே.எம். ஸ்வீட் முருகன்,
கரடிகொல்லப்பட்டி - 635 203,
தருமபுரி மாவட்டம்.

“இன்னும் யார் யார் வரணும்?”

“நாலு பேர் வரணும். செல்லக்கிளி, மாரியாத்தா, சுப்பம்மா, கனகம்.”

“வந்திருவாங்களா, நாங்க போவட்டுமா?”

“வந்திருவாங்க. அட, வரல்லேன்னா எங்ககிட்ட குடுத்துட்டுப் போங்க.”

“நாலு பேத்துக்கு நாநூறு ரூவா. இந்தா புடியுங்க!”

“அன்னக்கிளி, நீதான் வாங்கிக்கயேன்!”

“ரூவாயக் கொடுத்துப்புட்டோம். பாத்து வோட்டுப் போட்ருங்க.”

“நாங்க சத்தியம் பண்ணிக் கொடுத்துருக்கோம்ல. மாறிடுவமா?”

“மாறிட்டா மாரியாத்தா சாபம் உங்கள உடாது.”

“சின்னம் ஞாபகம் இருக்கில்ல? ஆளுங்கட்சி சின்னம் எது?”

“சைக்கிள் செயின்.”

“சைக்கிள்ள போட்றாதிங்க. அவங்க எதிராளிங்க!”



“கொடம் தாரேன்னீங்க. இன்னி வர வரல்லியே?”

“நல்லா இருக்குதே! ஏம்மா, கொடம் வேண்டாமுன்னுட்டுத்தானே ரூவாயக் கேட்டீங்க! இப்பக் கொடத்தையும் குடுன்னா?”

“ஏங்க, தண்ணிதான் தர மாட்டங்கறீங்க. கொடமாவது குடுக்கலாமில்ல?”

“பாத்தீங்களா பாத்தீங்களா, பேச்சு மாறுதிங்க! மாரியாத்தா மேல சத்தியம் பண்ணிட்டு, பணத்தை வாங்கிட்டதும் விவகாரம் பண்ண ஆரம்பிச்சிட்டிங்க!”

“தூ! ஜெயிச்சு வந்தா லிச்ச லட்சமா சம்பாரிக்கப் போறீங்க. அப்றமேட்டு இந்தப் பக்கமா வாரப் போறீங்க?”

“இப்ப என்னாங்கறீங்க?”

“சூரப்பாளையத்துல அம்புட்டுப் பேருக்கும் பொடவ கொடுத்தாங்களாம். நீங்க வெறும் ரூவா மட்டுந்தானே தாறீங்க! அம்பது ரூபா சேத்துக் குடுத்தா கொறஞ்சா போயிடுவீங்க?”

சின்ன வட்டம் பெரிய வட்டத்தைப் பார்க்க,

பெரிய வட்டம் வேட்பாளரைப் பார்க்க, வேட்பாளரின் எடுபிடி பையைத் திறந்து ஒரு கற்றையைக் கொடுக்க, எச்சில் தொட்டு எண்ணப்பட்ட நோட்டுக்கள் ஆளுக்கு ஐந்து வீதம் கணக்கிடப்பட்டு, மொத்தத் தலைகள் எண்ணப்பட்டு, கை மாறுகிறது. சின்ன வட்டத்தை முறைக்கிறது பெரிய வட்டம். பெரிய வட்டத்தை முறைக்கிறார் வேட்பாளர்.

“இதுக்குத்தான் சொன்னேன், ரூவாயக் குடுத்த உடனே போயிரலாம்னு. இதுங்க கிட்ட பேச்சுக் குடுத்துட்டே இருந்தா, மீட்டர் ஏத்த மாதிரி ஏறிக்கிட்டே இருக்கும்.”

“அல்லாரும் வாங்கிக்கிட்டீங்கல்லியா? வராத நாலு பேத்துக்கும் சேத்தே குடுத்துட்டோம். மறந்திராதீங்க... சைக்கிள் செயின்.”

“இந்தாடீ, புடி நூத்தம்பது ரூவாய. அடவு வச்சிருக்கற கம்மலை மூட்டுடலாம்.”

“யோவ் சின்ன வட்டம், அந்த பண்டல்ல மூவாயிரம் இருந்திச்சே? எல்லாத்தையுமா உருவிட்டாங்க?”

“நவருங்க. போயிடலாம் இங்கிருந்து. உட்டா நம்ம வேட்டியவே உருவிடுவாங்க. தாய்க்குலம் உஜாரா இருக்குது!”

“பதினாலாவது வட்டம் சார்பாக, அண்ணன் பெரிய நாயகத்துக்கு இந்தக் கைத்தறித் துண்டை அணிவிக்கிறேன்.”

“அக்கா ஆசி பெற்ற நம் அருமை அண்ணன் பெரிய நாயகம் இப்போது பேசுவார்.”

“என் ரத்தத்தின் ரத்தமான ரத்தங்களே! அத்தனை பேருக்கும் என் நன்றி கலந்த வணக்கத்தை முதற்கண் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நம் தலைவர் ஆணையிட்டார். நான் உங்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்றார். நாட்டில் ஜனநாயகம் தழைக்க, தழைத்து ஓங்க, நாம் எல்லோரும் உழைப்போம். ஜனநாயக நாட்டில் தேர்தல் ஒன்றே மக்களின் ஆயுதம். பொய், பித்தலாட்டங்கள் ஒழிந்து, சுத்த சுயம் பிரகாசமான ஜனநாயகம் நமக்குக் கிடைக்க வேணுமானால், அதற்கு அதிகாரமும், பதவியும்தான் இன்றைக்குத் தேவைப்படுகிறது. எனக்கு வோட்டுப் போட்டு என்னைப் பதவியில் அமர்த்த நீங்கள் எல்லோரும் உறுதி பூண்டிருக்கிறீர்கள் என்பதை நினைத்துப் பார்க்கும்போது, பரவசம் ஏற்படுகிறது. மீண்டும் உங்களுக்கு என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு அமைகிறேன். நன்றி வணக்கம்.”

“ஒரு குடிசை, ஒரு வூடு பாக்கி இல்லே தலைவரே. காலனி காலனியா நுளஞ்சு, அம்மாமாரே, அய்யாமாரேன்னு கெஞ்சி,

சித்தார்த்

வோட்டு மொத்தமும் சைக்கிள் செயினுக்கே வர்ற மாதிரி உழைச்சிருக்கோம்."

"வோட்டு எண்ணையிலதானே தெரியப் போவுது!... எத்தினி பண்டல் செலவாச்சு?"

"மொத்தமாவா?"

"ஆமா. மொத்தமாத்தான் கேக்குறேன்."

"நாலு பண்டல். ஒரு முந்நூறு நாநூறு மிஞ்சும்."

"யப்பாடியோவ்! நாலு லட்சமா! இன்னும் கிழாண்டை இருக்கற காலனி வோட்டுக்கெல்லாம் யாரு கொடுக்கறது?"

மௌனம்.

"கேக்கறன்ல? இன்னொரு லட்சம் ஆகுமே? வட்டச் செயலாளர் எங்க போயிட்டாரு? வரலியா?"

"இதா வந்திட்டேன்."

"பூத்ல எல்லாம் இன்னம் செலவு இருக்கு. மொத்தமா பூத் எவ்வளவுன்னு கணக்குப் பண்ணிக்கிடுங்க. கயேச்சை ஆட்களோட ஏஜெண்டுங்க யார் யாருக்கு, எத்தினி வெட்டணும்னு அதையும் சேத்துருங்க."

"செஞ்சிரலாம் தலைவா."

"ஜெயிக்கிற தொகுதின்னு கேட்டு வாங்கிட்டு, தோத்துக் கித்துப் போய் அசிங்கமாயிடக் கூடாது."

"நான் பாத்துக்கறேன் தலைவா. ஒண்ணும் ஆயிடாது. ஜெயிச்சிருவோம்."

"வெளியே காத்திருக்கறவங்களை நாலு நாலு பேரா அனுப்பச் சொல்லு... மத்தத் தொகுதி என்ன ஆச்சுன்னு பாக்கலாம்."

"**வ**ணக்கம்! புலிநகப் பாளையம் தொகுதியில் சைக்கிள் கட்சித் தொண்டர்களுக்கும், சைக்கிள் செயின் கட்சித் தொண்டர்களுக்கும் நடந்த பயங்கர மோதலில், சைக்கிள் கட்சித் தொண்டர்கள் நான்கு பேருக்குக் கத்திக்குத்து விழுந்ததில், இருவர் நிலை கவலைக்கிடமாக



"தலைவர் 'வோட்டு பேங்க் வரை போயிட்டு வர்றேன்'னு சொல்லிட்டு எங்கே போறார்?"

"ஒரு கள்ளச்சாராய கும்பல் தேர்தல்ல கள்ள வோட்டுக்கள் போட்டு இவரை ஜெயிக்க வைக்கிறதா வாக்குறுதி கொடுத்திருக்காம்... அவங்களைப் பார்க்கத்தான் போறார்!"

- வசந்தி வள்ளுவன்

இருக்கிறது. வேறு தொகுதிகளிலும் சிறு சிறு மோதல்களும், கத்திக்குத்துச் சம்பவங்களும் நிகழ்ந்துள்ளதாக எமது நிருபர்கள் தெரிவிக்கின்றனர். தமது கட்சி அமைதி வழியிலேயே ஆட்சியைப் பிடித்து, அகிம்சைப் பாதையில் அடியெடுத்து வைக்கும், என்று சைக்கிள் செயின் கட்சித் தலைவர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார்..."

"பண நாயகம் ஒழிந்து ஜனநாயகம் உண்மையாக மலர, எனது கட்சியும், தொண்டர்களும் தேர்தல் தேதி அறிவிக்கப்பட்ட அன்று முதலே அயராது உழைத்து வருகிறார்கள். நாம் நேர்மையான பாதையையே தேர்ந்தெடுத்து, வெற்றிப் பாதையில் பயணம் செய்வோம் என்று மீண்டும் கூறிக் கொள்கிறேன், என சைக்கிள் செயின் கட்சித் தலைவரின் அறிக்கை கூறுகிறது."

"வாக்காளப் பெருமக்களே! எதிர்க்கட்சி வேட்பாளரின் பேச்சில் மயங்கிடாது, பசப்பு வார்த்தைகளுக்குப் பணிந்திடாது, அவர்கள் தந்த காசு பணத்துக்கு ஆசைப்படாது, என்னைத் தேர்ந்தெடுத்த உங்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த வெற்றிக் கனியை, தலைவரின் காலடியில் பணிவுடன் வைத்து வணங்குகிறேன்."

"**செ**ன்ற தேர்தலைவிட இம்முறை வோட்டுப் போட்டவர்களின் சதவிகிதம் மிகவும் குறைவாக 42 சதவிகிதம் மட்டுமே இருந்ததாக, தலைமைத் தேர்தல் ஆணைய அலுவலகச் செய்திக் குறிப்பு தெரிவிக்கிறது. ஆனால் ஜனநாயக நெறி முறைகளைப் பெரிதும் கடைப்பிடித்து, இந்த நாட்டில் மிகச் சிறந்த முறையில் தேர்தல்கள் நடைபெற்றதற்காக, உலகத் தலைவர்கள் வாழ்த்துக்கள் அனுப்பிய வண்ணம் இருக்கிறார்கள்..."



"அடுத்த பிரதமராக யாரைப் பார்க்க ஆசை?" என்று timesofindia.com இணையதளம் நடத்திய கருத்துக்கணிப்பில், 67% வாக்குகளுடன் புன்னகை செய்கிறார் வாஜ்பாய். சோனியா 13%, அத்வானி - பிரியங்கா 6% என்று பின்தொடர, லல்லு அள்ளியிருப்பது 1% வாக்குகள்தான். முன்னால் தேர்தல் கமிஷனர் ஜெ.எம். லிங்டோவிற்குக்கூட 2% வாக்குகள் கிடைத்திருக்க, நம்ம 'அம்மா' அருகில் ஒரு பெரிய 0(%).




# இப்படியொரு விருது!

இணையதளம் சொல்வது இருக்கட்டும், தேர்தல் களம் என்ன சொல்லப் போகிறதோ?

•••

பாடும் மெயில்கள், நடனம் ஆடும் மெயில்கள், வைரஸ் மெயில்கள் எல்லாம் தெரியும் நமக்கு... இப்போது வந்துவிட்டன வாசனை மெயில்கள்! உங்கள் நண்பருக்கு அனுப்பும் ரோஜாக்கள் அடங்கிய வாழ்த்து அட்டையுடன், இப்போது அதன் வாசனையையும் சேர்த்து அனுப்பலாம். பிரிட்டிஷ் இணைய சேவை (நம்மூர் பி.எஸ்.என்.எல் மாதிரி பிரிட்டிஷின் பி.ஜ.எஸ்.பி) தற்போது இந்தப் பரிசோதனையை நடத்தி வருகிறது.

வேண்டாதவர்களுக்கு கூவத்தின் வாசனையை அனுப்பவும் வசதியிருக்கிறதாம்!

•••

"மிட்நைட் ரன்" - 'சென்ட் ஆஃப் எ வுமன்' போன்ற சிறந்த நகைச்சுவைத் திரைப்படங்களின் இயக்குநர் மார்ட்டின் பிரெஸ்ட்டும், உலகப் புகழ் பாப் பாடகி ஜெனிஃபர் லோபஸும் இணைந்து வழங்கிய 'கிக்லி' என்ற நகைச்சுவைப்படம் ராஸீஸ் (Razzies).காம் இணையதளத்தின் 24வது விருது வழங்கும் விழாவில் ஐந்து விருதுகளை அள்ளியுள்ளது. இந்த வருடத்தின் மிக மோசமான படம் என்பதற்குத்தான் இந்த விருதுகள் என்பதை www.viewlondon.co.uk கூறுகிறது.

இதே போல் தமிழ்ப் படங்களுக்கும் கொடுக்க ஆரம்பித்தால் கடும் போட்டி நிலவுமோ?

இந்த வார ஜோக்: பறந்து கொண்டிருக்கும் ஒரு ஹெலிகாப்டர். அதிலிருந்து தொங்கும் ஒரு கயிறு. இக்கட்டான சூழ்நிலையில் அதில் ஒரு பெண், நான்கு ஆண்கள் தொங்கிக் கொண்டு செல்கின்றனர். அதற்கு மேல் கயிறு தாங்க வேண்டுமெனில், யாராவது ஒருவர் குதித்தே ஆக வேண்டும் என்ற நிலை. எல்லோரும் கலங்கிக் கொண்டிருக்க, அப்பெண்மணி உணர்ச்சிகரமாகப் பேசினாள்:

"நான் கயிற்றை விட்டு விடுகிறேன். என் வாழ்க்கையில் என் பெற்றோருக்கு, கணவருக்கு, குழந்தைகளுக்கு என விட்டுக் கொடுத்து வாழ்ந்தே பழகிவிட்டேன்" என்று சொல்ல - ஆண்கள் அனைவரும் கை தட்ட ஆரம்பித்தனர்.

- முகில்

* தாம் கலந்து கொள்ளும் பொதுக்கூட்ட மேடைகள் கிழக்கு அல்லது வடக்குத் திசையில் இருக்குமாறு பார்த்துக் கொள்ளச் சொல்கிறாராம் முதல்வர். அம்மா சென்டிமென்ட்!



* இத்தனை வருஷமாக பாஸ்போர்ட் இல்லாமல் இருந்த ஜி.கே.வாசன், சமீபத்தில்தான் பாஸ்போர்ட் எடுத்திருக்கிறார்.

* கால் வீங்காமல் இருப்பதற்காக 'பேண்டேஜ்' போட்டுக் கொண்டுதான் இரவில் தூங்குகிறாராம் கலைஞர்!

* சிறையிலிருந்து வெளியே வந்த வைகோ, இரண்டு படங்களை விரும்பிப் பார்த்திருக்கிறார். ஒன்று, காக்க காக்க, மற்றொன்று விருமாண்டி.







# பிட்டா படிங்க!









* திருநாவுக்கரசர் கையில் இப்போது பன்னிரண்டாயிரம் அப்ளிகேஷன்கள் இருக்கின்றன. அத்தனையும் கம்ப்யூட்டர், பட்டப்படிப்பு, பட்ட மேற்படிப்பு படித்தவர்களிடமிருந்து வந்திருக்கின்றனவாம். இவர்களுக்கெல்லாம் எப்படி வேலை வாங்கிக் கொடுக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறாராம் அரசர்.

* திருமாவளவன் சென்னையில் இருக்கும்போது, அவரது சகோதரி வீட்டிலிருந்துதான் சாப்பாடு வருகிறதாம்! அறுசுவை உணவு?

* செல்ஃபோன் வைத்திருக்காத தலைவர்களில் ஈ.வி.கே.எஸ். இளங்கோவனும் ஒருவர். 'அது எதுக்கு? நான் ஒண் ம் கிடைக்காத ஆளில்லையே. எங்க போனாலும் அங்க ஃபோன் இருக்கே' என்கிறார் இளங்கோவன்.

- ஏக்ஜ

மார்ச்.14-2004

# மினி கல்கி



# டீனேஜ் சவால்கள்!

கௌரவ ஆலோசகர்கள்...

டாக்டர் கே.ஸ்ரீதர்

டாக்டர் எஸ்.அசோக்

டாக்டர் எல்.மகாதேவன்

சவேரா ஹோட்டல்ஸ் நீனா ரெட்டி

வழக்கறிஞர் கே.சுமதி

ஓவியர் மருது

டாக்டர் இரா.அன்புமணி

பேராசிரியர் கு.ஞானசம்பந்தம்

டாக்டர் தமிழிசை சௌந்தரராஜன்

"அம்மா, சீக்கிரம் வந்துடு", "அப்பா, என்னை விட்டுட்டுப் போகாதே!"

– இது மாதிரியான பல அப்பாவித்தனங்கள் முடியற காலகட்டம்தான் டீனேஜின் தொடக்கம்! இது மட்டுமில்லாம, புதுப்புதுக் குறும்புகள், புதுப்புது எண்ணங்கள், புதுப்புதுக் கவலைகள், இப்படி பல 'கள்' என்ட்ரி ஆகிற பருவமும் டீனேஜ்தான். இதை எப்படிக் கையாள்றது? அவங்க பிரச்னைகளை, பெற்றோர்கள் எப்படிப் புரிஞ்சிக்கறது?

கூடவே வாங்க, தோழமையா சில விஷயங்களைப் பகிர்ந்துக்குவோம்.

## பருக்களின் காலம்

"அம்மா இன்னைக்கு நான் ஸ்கூல் போகலை."

"ஏம்மா?"

"முகமெல்லாம் பருவா இருக்கு. எல்லோரும் கிண்டல் பண்றாங்க!"

இப்படி ஒரு கேள்வி வந்ததுமே, "பரு வரத்தான் செய்யும். அதுக்காக ஸ்கூலுக்குப் போகாமலா இருப்பே.. கழுதை, சீக்கிரமா சாப்பிட்டு போகற வழியைப்பாரு" – இப்படி அதட்டலோடு சொன்னா, அந்த டீனேஜ் மனுஷிக்கு அம்மா மீது வெறுப்புத்தானே வரும்? கொஞ்சம் தெளிவா விளக்குங்க.

"பரு வருவது இயற்கைதான். அதுக்கு மூணு காரணங்கள் இருக்கு. முகப்பகுதியில அதிகமா வேலை செய்யற எண்ணெய்ச் சுரப்பிகள் முதல் காரணம். இரண்டாவது உடலில் சுரக்கிற 'பெரிய மனுஷி' ஹார்மோன்கள். மூன்றாவது பாக்டீரியாக் கிருமிகள். பருவ வயதுல இந்தக் காரணங்களால தான் பரு வருது. இது எல்லோருக்குமே வரக்கூடிய விஷயம் தான். இதுக்காக வருத்தப்பட வேண்டியதே இல்லை. இப்போ நிறைய கிரீம்கள் வந்திருக்குன்"னு சொல்லுங்க. "ஓஹோ.. அப்படியான்னு" ஸ்கூலுக்கு கிளம்ப ஆரம்பிச்சுடுவா.



## ரோம ராஜ்யம்!

மனுஷினுக்குத் தலை முடி மீது அதிகமான காதல் உண்டு. அதை இஷ்டத்துக்கு வளைத்து நெளித்து, ஹேர் ஸ்டைல் பண்ணிக்கறதுல டீனேஜர்களுக்குத்தான் எக்கச்சக்கப் ப்ரியம்.



ஆனா இந்த வயசுலேயே தலையில பாதிமுடி காணாமப் போயி, வழுக்கை நிலைக்கு வந்தா கவலை வராதா?

வரத்தான் செய்யும். ஆனா இள வழுக்கைக்கு டென்ஷன் வாழ்க்கையும், குடும்பத்தில் வம்சா வழியா இந்தப் போக்கு இருக்கறதும் காரணம். முடி பற்றி ஒரு சின்ன விஷயத்தைத் தெரிஞ்சுக் கோங்க. ஐந்திலிருந்து ஏழு வருஷம் வரை தலை முடி வளரும். பிறகு ஆறு மாதத்துக்கு முடியுதிர் காலம். பிறகு ஐந்திலிருந்து ஏழு வருஷம் வரை வளரும். பிறகு மீண்டும் முடியுதிர்... சுழற்சி முறை முடி வளர்ச்சிக்கு உண்டு. அதனால 'ஐயையோ, ரொம்ப முடி கொட்டுதே'ன்னு கவலைப்படற வங்க, ஆறு மாதம் கழிச்சுப் பாருங்க. 'இல்லை, நான் அப்படித்தான் கவலைப்படுவேன்' என்று அடம்பிடித்தால் உங்க பாடு! கவலைப்பட்டால், இருக்கிற முடியும் அதிகமாக உதிருமாம்!

## இள நரை

"டென்த் ஏ பாமா என்னையே பாத்திட்டிருக்காடா லவ்வா இருக்குமா?"

"லவ்வா? உன் நரைச்ச தலையைப் பார்த்து பரிதாபப்பட்டிருப்பா. அதைத் தப்பா எடுத்துக்கிட்டு, காதல் அது இதுன்னு அலையாத."

நண்பர்கள் இப்படிச் சொன்னா அதை சீரியஸா எடுத்துக் காதீங்க. (பாமாவுடைய பார்வையையும் சீரியஸா எடுத்துக்க வேண்டாம்!) நரைக்கும் காதலுக்கும் சம்பந்தமில்லைன்னாலும். இள நரைக்கு ஆயிரம் காரணம் சொல்றாங்க.

தேங்காய் எண்ணெயைத் தலையில தடவி அழகா தலையை வாரினா, இள நரை அதிகமா தெரியாது. இதுக்கு டாக்டர் டாக்டரா ஓடறது, கண்ட மருந்தையும் தலையில தடவிக்கிட்டு அலையறதிலெல்லாம் பயனில்லையாம்!

## சிறுமி பெண்ணாகிறாள்

குறிப்பிட்ட நாள்ல ஒரு சிறுமி பூப்படைந்துவிட்டதா நாம



சொன்னாலும், அதுக்கு முன்னாலேயே பலவித மாற்றங்கள் அவங்க உடம்புல ஏற்படுது.

பன்னிரண்டிலிருந்து பதினான்காவது வயசுலதான் ஒரு பெண்ணுக்கு மாத விலக்கு தொடங்குதுன்னாலும், பெரும்பாலான பெண் குழந்தைகளுக்கு, ஒன்பதாவது வயசிலிருந்தே இலேசான மார்பக வளர்ச்சியை உணரலாம்.

'செகண்டரி செக்ஷுவல்' அடையாளங்கள் அப்பதான் ஏற்படுது. (அந்தரங்கப் பகுதிகள்ல ரோமம் முளைப்பது.)

பூப்படைந்ததுமே காரணமேயில்லாமல் இந்தப் பெண்களுக்கு வெட்கம் ஒட்டிக்கும். எல்லோரும் தன்னையே பார்க்கறாங்கன்னு ஓர் உணர்வு. இதனால தன்னை அழகு படுத்திக்கணும்னு நினைக்கிறாங்க. இது தப்பில்லை.

இந்த மாதிரி நேரங்கள்ல என்னென்ன மாற்றங்கள் உடல் ரீதியா ஏற்படும்ங்கறதை பெண்ணோட அம்மா, முன்கூட்டியே சொல்லிடறது நல்லது.

"வளர வளர அவளா தெரிஞ்சுக்குவா. இதையெல்லாமா போய் சொல்லிக் கொடுப்பாங்க?" என்று பெற்றோர் ஒதுங்கினா, குழந்தைகள் அரைகுறை அல்லது தவறான தகவல்கள் தெரிஞ்சுக்கிட்டு பயப்படக்கூடும் அல்லது அதிர்ச்சியடையக் கூடும்.

## சிறுவனும் பெரியவனாகிறான்



சிறுவர்களுக்கும் டீனேஜ் மாற்றங்கள் படிப்படியா தோன்றும். ஆனா இது 'பளிச்'சுனு வெளிப்படையாத் தெரியறதில்லை.

பதிமூணு வயசுல அவனோட உயரம் அதிகமாகுது. அவனோட தசைகளும் எலும்புகளும் வளர்ந்து, வடிவம் பெற்றதற்கு அடையாளமா தோள்கள் அகலமாகுது.

பலம் கூடுது. முன்பைவிட வேகமாக சைக்கிள் ஓட்டறான். அப்பாவோட ஸ்கூட்டரைத் திருட்டுத்தனமா ஓட்டணும்னு நினைக்கிறான். "புதிய மாடல் பைக்கெல்லாம் வந்திருக்கே, வாங்கக் கூடாதா?"னு அனாயாசமா, கேட்காமலே அட்வைஸ்களை வாரி வழங்கத் தொடங்கறான். மேல் உதட்டின் மேல் கருமை உண்டாகத் தொடங்குது - மீசை! குரல்வளை வலுவாகுது. குரல் மாறுது.

ஏன் இத்தனை மாற்றம்? காரணம், ஆண் ஹார்மோன்கள். இதை "டெஸ்டெஸ்ட்ரோன்"னு சொல்வாங்க. இதை வாழ்நாள் பூரா ஆண் உறுப்புகள் தயாரித்தபடியே இருப்பதால

இந்த ஆண் தன்மை தொடருது. டெஸ்டஸ்ங்கற ஆண் உறுப்புகள் பிறந்ததிலிருந்தே அவன் உடலில் இருக்குன்னாலும், இந்த டீனேஜ் காலகட்டத்திலதான், அவை இன உயிரணுக்களை



(அதாவது விந்துவை) உருவாக்க ஆரம்பிக்குது.

## நட்பில் குழப்பம்

எட்டாம் வகுப்புல படிக்கிற ஒரு சிறுவனுக்குத் திடீர்னு சோகம். இதுவரை நெருக்கமாக இருந்த வகுப்புத் தோழி, இப்போ பேசுவதைக் குறைச்சுக்கிறாளே... ஒரு நட்பு முறிஞ்சு போனதற்காக மனசுக்குள்ள அழுதுக்கிட்டிருக்கான் அவன்.

இந்தப் பின்னணிக்கு முக்கியக் காரணம், சிறுவனைவிட சிறுமி சீக்கிரமே உடல் மாற்றங்களைப் பெறுகிறாள்ங்கறதுதான். ஒரு சிறுவன் ''ஆண்பிள்ளையா'' மாறும் வயது, ஒரு சிறுமி பெண்ணாக வளர்ச்சியடையற வயசைவிட, சுமார் இரண்டு வருஷங்கள் அதிகம்.




தவிர டீனேஜை எட்டும் வரை, ஒரே மாதிரி ரசனைகளும் கருத்துகளும் கொண்டவங்க கூட, இந்தப் பருவத்தில புதிய ரசனைகளை வளர்த்துக்கிட்டு, அதே போல ரசனை உள்ளவங் களோடு நட்பை வளர்த்துக்கவே விரும்பறாங்க. இதனால நண்பர்கள் வட்டம் மாறலாம்.

ஆணும் பெண்ணும் ஒரே வகுப்பில படிப்பதும், பேசுவதும், அரட்டையடிக்கறதும், இந்தக்காலத்தில (குறைந்தது நகரங்களில்) சகஜம். பெற்றோர் இதை ஏற்றுக் கொள்ளப் பழகிட் டாங்கன்னாலும், நட்பின் எல்லைக்கோடு எதுங்கறதைத் தீர்மானிப்பதில பெற்றோருக்கும் டீனேஜர்களுக்கும் கருத்து வேறுபாடு ஏற்படுது. தலைமுறை இடைவெளி!



''ஏன், பாய்ஸோட பழகினா என்ன தப்பு? அவங் களோட குரூப் ஸ்டடி செஞ்சா அதுல என்ன குற்றம்?''னு தொடங்கிற கேள்விகள், முடிவில்லாம தொடரக்கூடும். பெற்றோர் உரிய சுதந்திரமும் கொடுக்கணும். கண்காணிக்கறது தெரியாம கண்காணிக்கவும் செய்யணும்.

டீனேஜ் பெண்களுக்கும் பெற்றோரிடம் இது பற்றி விளக்க வேண்டிய கடமை உண்டு. ''நானும் சக மாணவர்களும் கள்ளமில்லாமல்தான் பழகு கிறோம். இதைத் தடுக்காதீங்க. படிப்பு இதனால கெடாது''ங்கற மாதிரியான விளக்கங்கள் பெரும்பாலும் பலனளிக்கும்.

தெருவிலயும் பிற இடங்கள்லயும் ஆண் நண்பர்களோட பேசுவதைவிட, அவங்களை வீட்டுக்கு அழைச்சுட்டுவந்து பேசலாம். இந்தச் சந்திப்புகள்ல உங்கள் தோழிகளையும் சேர்த்துக் கிட்டா, பெற்றோரின் பதற்றம் போயே போயிடும்.

நண்பர்களோட பெற்றோரையும் உங்கள்

பெற்றோருக்கு அறிமுகப்படுத்தி வையுங்க. பிறகு இது போன்ற நட்பு பற்றி அவங்க கவலைப்படமாட்டாங்க.

## இது நம்ம ஸ்டைல்!

"செல்வத்தை இழந்தால் அது இழப்பு இல்ல. உடல் நலத்தை இழந்தால் அது ஓரளவு இழப்பு. நற்குணங்களை இழந்தால் அது அனைத்தையுமே இழந்ததற்குச் சமம்"னு ஆங்கிலப் பழமொழி ஒன்று உண்டு.

இந்த நல்ல நடத்தைகளுக்கும், நாகரிகமான செயல்களுக்கும் டீனேஜில்தான் நிறைய சவால்கள்! சிறு குழந்தையா இருக்கும்போது செய்யும் தவறுகளையும் அலட்சியங்களையும், மற்றவங்க பொருட்படுத்தமாட்டாங்க. ஆனா டீனேஜை



எட்டிய பிறகும் இது தொடர்ந்தா, அது நிச்சயம் தவறுதான்னு கணக்குல எடுத்துப்பாங்க. அப்படி வந்து சேரும் பழியை நீக்க ரொம்பக் காலம் தேவைப்படலாம்.

நாகரிகம்னா என்ன? ஸ்பூனும் ஃபோர்க்கும் கொண்டு சாப்பிடறது மட்டுமா? இல்லை. வேறு பல நல்லொழுக் கங்களின் கலவைதான் உண்மையான நாகரிகம். முக்கியமா இனிமையான வார்த்தைகள், சுயகட்டுப்



பாடு, மத்தவங்க உணர்வை புரிஞ்சுக்கிட்டு மதிக்கறது... இவைதான் அடையாளங்கள்.

எப்பவும் உங்க இடத்துக்கு வர்றவங்களை இனிமையான முகத்தோடு வரவேற்கணும்! ஒரு புன்னகையால நஷ்டம் எதுவுமில்லை. லாபங்கள் ஏராளம். உங்கள் நட்பு வட்டத்தில் எந்தச் சிரமமும் இல்லாமல் கணக்கு ஏறிடும்.

மற்றவர்களோட பிரச்னைகள்லயும் சோகங்களிலும், மனப்பூர்வமாப் பங்கெடுத்துக்க முயற்சிக்கணும். அதேபோல, பிறரது குறைகளைப் பெரிசா நினைச்சு அவங்களை வெறுக்காம, அவங்களோட குணங்கள்ல கவனம் செலுத்தணும். நம்ம கிட்டே குறைகளே இல்லையா என்ன...!

யாராவது ஏதாவது 'கிப்ட்' கொடுத்தா, உண்மையைப் பேசுவதா நினைச்சு, "இதே மாதிரி என்கிட்டே ஏற்கெனவே ஒண்ணு இருக்கே, பாண்டிபஜார் பிளாட்பார்ம்லதானே இதை வாங்கினீங்க?" இப்படிச் சொல்லிடாதீங்க. அந்த கிஃப்டால நீங்கள் மனசுல பெரிதா ஆனந்தப்படலைன்னாலும், அப்படித்தான் உங்கள் உணர்வுகளை வெளிப்படுத்திக் கொள்ளணும்.

கல்யாணம், பிறந்த நாள் விழா இதுல கலந்து கொள்ளும்போது, சுற்றுப்புறத்தைப் பற்றிய எந்தக் கவலையும் இல்லாம, ஒரு மூலையில போய் உட்கார்ந்துக்க வேண்டாம். சுற்றுமுற்றும் நடப்பதையும், வெவ்வேறு மனுஷங்களோட குணாதிசயங்களையும், கண்களையும் மனசையும் திறந்து வச்சுக்கிட்டுப் பாருங்க. தமாஷாவும் இருக்கலாம். பல புதிய பாடங்களையும் உங்களுக்கு அவை கற்றுக் கொடுக்கலாம்.



மற்றவங்க பெயர்களை நினைவில வச்சுக்க முயற்சி செய்யணும். நாமாகவே மற்றவர்கள்கிட்ட அறிமுகம் செய்துக்கறதிலயும் தவறில்லை. உங்கள் வட்டத்தில் பேசும்போது, அது அர்த்தமில்லாத அரட்டையாக இருந்தால் கூடப் பரவாயில்ல. நிறைய எதிர்மறையான எண்ணங்களையோ ("என்ன மார்க் வாங்கினாலும் இந்த நாட்டில் சிபாரிசுக்குதான் மதிப்பு. சுரண்டல் பேர்வழிகளுக்குதான் வாய்ஸ்"), பிறரைப் பற்றிய வெறுப்பு வார்த்தைகளையோ ("அந்தக் கனகாவைப் போல ஒரு பாய்ஸனஸ் கேர்ளை நான் பார்த்ததே இல்லை. அவளை எல்லாரும் ஒதுக்கிவைக்கணும்") மிகவும் அந்தரங்கமான விஷயத்தையோ வெளிப்படுத்த வேண்டாம். நகைச்சுவையாகப் பேசப் பழகிக்கிட்டா, அது நட்பு வட்டத்தை அதிகரிக்க மட்டுமல்ல, வாழ்க்கையில் ஏதாவது பிரச்னைகள் வரும்போது, மனசை இலேசா வச்சுக்கவும் உதவும்.

யாராவது அந்தரங்கமான விஷயத்தை




நம்மிடம் சொன்னா, அதை ஒரு போதும் பிறருக்குச் சொல்லலாகாது. அப்படிச் சொன்னால் இரண்டு பேரோட நம்பிக்கைகளையும் ஒரே கணத்துல நாம இழந்துடுவோம்.

அதேபோல் மற்றவங்களோட உணர்வுகளும் நடவடிக் கைகளும் வேடிக்கையாகப் பட்டாக்கூட, அதைக் கிண்ட லடிக்க வேண்டாம், முக்கியமா நாலு பேர் இருக்கும்போது.

குரூப்பா ஒரு விஷயத்தை விவாதம் செய்யும்போது நாமே பெரும்பாலான நேரம் பேசிக்கிட்டிருக்கக் கூடாது. எதையோ சாதித்துவிட்ட திருப்தி ஏற்பட்டாலும், பிற ரோட எரிச்சலையும் அதிருப்தியையும் சம்பாதிப்போம்.

ரொம்ப தற்பெருமையாப் பேசிக்க வேண்டாம். அப்புறம் பாராட்ட விரும்புறவங்க கூட, எதிர்க் கட்சிக்குத் தாவக்கூடும்.

மற்றவங்களோட கருத்துகளுக்கு மதிப்புக் கொடுத்து, மொழி வளத்தை அதிகரிச்சுட்டு தன்மையான குரலில் பேசினா, நம்ம பெருமை தானாப் பெருகும்.

தெரிஞ்சவங்களோட (நண்பர்கள் மட்டுமல்ல உறவினர் களும்தான்) பிறந்த நாள் மற்றும் திருமண நாளுக்கு வாழ்த்துச் சொல்லலாம். சுயமாகச் சம்பாதிக்காத நிலையில்தான் பெரும் பாலான டீனேஜர்கள் இருப்பாங்கங்கறதால, பெரிய பரிசுகள் கொடுக்கணும்ங்கற கட்டாயம் இல்லை. சொல்லப்போனா, மனப்பூர்வமான ஒரு வாழ்த்தோ, ஒரு ரோஜாப்பூவோ கூட போதும்.

## தவிர்ப்பது தேவை

கல்கி மருத்துவ மலருக்காக, டாக்டர் சுனிதி சாலமனைச் சந்திச்சப்போ, அவர் சொன்ன ஒரு விவரம் அதிர்ச்சியளிப்பதா இருந்தது.

கல்விக்குப் பெயர்போன ஒரு சென்னைக் கல்லூரிக் குப் போய் அவர் உரையாற்றியபோது, பட்டப் படிப்பு படித்துக் கொண்டிருந்த ஒரு மாணவன், தனியா அவர்கிட்ட தயக்கத்தோட ஒரு சந்தேகத் தைக் கேட்டிருக்கான். "சில இரவுகள்ல தூங்கும்போதே எனது விந்து வெளி யேறிவிடுகிறது. இதை ஒரு நண்பனிடம் சொன்னேன். இப்படி நடந்தால் கல்யாணத்துக்குப் பிறகு என் மனைவியைத் திருப்தி அடையச் செய்ய முடியாதுன்னும், இந்தக் குறை தீர ஒரே வழி, விலைமாது ஒருத்தியிடம் ஒரு முறை சென்று வருவது தான்னும் சொல்றான். இது உண்மையா டாக்டர்?"




மினி கல்கி

பல சினிமாப் படங்கள் காதலை அடிப்படையாகக் கொண்டு வருகின்றன. குறைவான உடைகளுக்கும் குளிக்கும் காட்சிகளுக்கும் குறைவில்லை. ஆனால் செக்ஸ் தொடர்பான அடிப்படையான அறிவியல் உண்மைகளை, டீனேஜ் பருவத்தில் உள்ளவர்களுக்கு சரியாக எடுத்துச் சொல்லத்தான் ஆளில்லை.

பெற்றோருக்கு இந்த விதத்தில் ஒரு கடமை உண்டு. மகனாக இருந்தால் அப்பாவுக்கும், மகளாக இருந்தால் அம்மாவுக்கும் இந்தப் பொறுப்பு.

டீனேஜின் பிற்பகுதியில், செக்ஸ் தொடர்பான பல விவரங்களை அறிந்து கொள்ள ஆர்வம் ஏற்படுவது இயல்புதான். ஆனால் நட்பு வட்டம் அதைப்பற்றித் தவறான அல்லது அரைகுறையான தகவலைத்தான் அளிக்க முடிகிறது. காரணம், அவர்களுக்குத் தெரிந்த அரைகுறைத் தகவல்களைத்தான் அவர்கள் கூற முடியும். சில சமயம் விளையாட்டுத்தனமாகப் பொய்களையும் கூறி விட, அதை உண்மை என்று நம்பிச் செயல்பட்டால் விபரீதம் விளையலாம்.

மேலே குறிப்பிட்ட பட்டப்படிப்பு மாணவன், நண்பன் சொன்னதை நம்பி, ஒரே ஒரு முறை விலைமாதிடம் சென்றுவந்தால்கூட, எய்ட்ஸ் என்ற கொடிய நோய் தொற்றிக் கொண்டு விடலாமே!



பதிமூன்று பதினான்கு வயதிலிருந்தே அந்தந்த வயதுக்கேற்ப, செக்ஸ் தொடர்பான அடிப்படை விஷயங்களைப் பெற்றோர் நேர்மையாக விளக்கிவிடுவதுதான் நல்லது. பதிமூன்று வயதில் ஓரளவு உண்மையையும், பதினேழு வயதில் எல்லா உண்மைகளையும் பகிர்ந்து கொள்ளலாம். ஆனால் ஒன்று, பொய்க் கலப்பு தேவையில்லை. அதே சமயம் தவறாகச் செயல்பட்டால், அதன் விபரீத விளைவுகள் வாழ்நாள் முழுவதும் தொடரும் என்பதைக் கண்டிப்பாகக் கூறுவது நல்லது.

தவறான செயல்பாடுகளில் ஈடுபடுவது மட்டுமல்ல, அப்படி ஈடுபடுபவர்களின் தொடர்பையும் கத்தரித்துக் கொள்வதுதான் டீனேஜ்காரர்களுக்கு நல்லது. நீங்கள் புகைபிடிக்கவில்லையென்றாலும், பக்கத்தில் இருப்பவர்கள் புகைபிடித்துக் கொண்டே இருந்தால், அது உங்களை பாதிக்கும் அல்லவா?

டீனேஜர்களைச் சுற்றியுள்ளவர்கள், தவிர்க்கவேண்டிய விஷயங்களைப் பற்றியே உற்சாகமாகத் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தால், பலவீனமான ஒரு தருணத்தில் இவர்களும் அந்த வழியில் செல்ல வாய்ப்பு உண்டு. எனவே நண்பர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதில் மிகவும் கவனம் தேவை.

## ஆட்டீன் கடிதங்கள்



"டெய்லி என் பின்னால வந்திட்டிருப்பானே சுதிர், அவன் இன்னிக்கு என்ன செஞ்சான் தெரியுமா?" புஷ்பா போட்ட புதிருக்கான விடை அவள் வட்டத்திலிருந்த எல்லாத் தோழிகளுக்குமே தெரிந்திருக்கிறது.

"என்ன லவ் லெட்டர் குடுத்தானா?"

இந்த லவ் லெட்டர் விவகாரத்தில பல கோணங்கள் இருக்கு. அந்தச் சுதிரை புஷ்பாவுக்குப் பிடிக்கவில்லைன்னா எப்படி ரியாக்ட் பண்றது? பிடிச்சிருந்தா என்ன செய்ய? பிடிச்சுதா பிடிக்கலையாங்கறதே தெரியலைனா?

புஷ்பாவுக்கு அழுகையே வந்துட்டுது. சுதிர்கிட்ட அவளுக்கு எந்த ஈடுபாடுமே இல்லை. காதல் கடிதம் கையில் வந்ததும் அவளுக்குப் பதற்றம். நாம பதிலே சொல்லலைன்னா, மௌனம் சம்மதம்னு அவன் நினைச்சுக்கிட்டா? அல்லது "நான் உன்னைக் காதலிக்கலை"னு நேரடியாவோ, கடிதம் மூலமாவோ எழுதிக் கொடுத்துட்டா அவன் அடங்கிடுவான்னு என்ன நிச்சயம்?

பேசாம இந்தக் கடிதத்தை அப்பா அம்மாட்ட கொடுத்துடலாமா? அல்லது பிரின்சிபாலிடம் கொடுக்கலாமா?

நல்ல வேளையா அவளுக்குப் பக்குவப்பட்ட தோழி ஒருத்தி இருக்கிறாள். "சில பசங்களால அவங்களுடைய ஆசைகளை மனசுக்குள்ளே பூட்டி வச்சிக்க முடியாதுடீ. அதுதான் இப்படிக் காதல் கடிதமா வெளிப்படுது. நீ இதில அதிர்ச்சியடைய எதுவுமில்லை. உனக்கு அந்த சுதிரிடம் ஈடுபாடு இல்லைங்கறதைப் பளிச்சினு நேரடியாவே சொல்லிடலாம். அல்லது அவனை ஒரு தடவை கோபமா முறைச்சுப் பார்த்தாக்கூட போதும். ஆனா ஒண்ணு மட்டும் செய்யாதே. "எங்கப்பாவுக்கு இதெல்லாம் பிடிக்காது, எனக்குப் பயமாயிருக்கு"னு எதையும் உளறி வைக்காதே. ஏதோ உனக்கு அவன்மேல ஆசை இருக்குங்கற மாதிரியும், உங்க அப்பாவின் காரணமாதான் நீ அதை மறைச்சிருக்கேன்னும் அவன் நினைச்சுக்குவான்" என்று எடுத்துச் சொல்கிறாள் தோழி.

இப்படி நடந்தால் விஷயத்தைப் பெற்றோர் காதில் போட்டு

வைப்பதுதான் நல்லது. அவர்கள் உடனே தலையிட்டுப் பெரிது படுத்தாதுபோனாலும் எச்சரிக்கையாக இருக்க அது உதவும்.




இந்தக் காலத்து டீனேஜ் பெண்கள் பலருக்கும் ஒரு விஷயத்தில தெளிவு இருக்கு.

''எக்காரணம் கொண்டும் யாருக்கும் காதல் கடிதங்கள் எழுதக் கூடாது. வருங்காலத்தில் நாம சிக்கிக் கொள்ள அதுவே அழுத்தமான ஆதாரங்களா அமைந்து தொலையலாம்''னு தெளிவாவே இருக்காங்க. இந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளைப் பொறுத்த வரை ஓரளவு எதிர்மறை சிந்தனைகள் கூட நல்லதுதான்.

ஒருவேளை சுதிரோட தோற்றம் புஷ்பாவை மயக்கி, அதே சமயம் அது காதலா இல்லையாங்கறது அவளுக்கே தெரியலைன்னா? அவளோட தோழி சொல்றதைக் கேளுங்க. ''டீனேஜ் பருவத்தில் இதெல்லாம் இயல்பான உணர்வுகள். ஆனால் நாம் இன்னொண்ணை தெரிஞ்சுக்கணும். நம் உடம்பும் மனசும் திருமணத்திற்கேற்ற வளர்ச்சியை இருபது வயதில்தான் அடையுது.



இதனால் பள்ளியிலும் கல்லூரியிலும் படிக்கும் பருவத்தைச் சேர்ந்த நம்மைப் போன்ற பெண்கள், உடல் உணர்ச்சிகளை மனமுதிர்ச்சி வெற்றி அடையும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். காதலைப் பற்றியோ, கல்யாணத்தைப் பற்றியோ முடிவெடுக்கும் நிலையில் நாம் இல்லை. நம் முழு கவனமும் படிப்பிலும், அதற்குப் பிறகு வேலை தேடும் முயற்சியிலும் இருக்கணும். அதற்குப் பிறகும் இதே சுதிர் உன்னைக் காதலித்து நீ அவனை விரும்பினால், கல்யாணம் செய்து கொள்ளலாம்.''

புஷ்பாவின் முகம் அரை மயக்கத்தில் இருப்பதைப் பார்த்ததும், அவளிடம் வேறு எச்சரிக்கை மணிகளையும் ஒலிக்க வேண்டும் என்று தோன்றியது அவள் தோழிக்கு.

''சுதிரின் தோற்றத்திலும், பள்ளி அல்லது கல்லூரியில் அவன் நடந்து கொள்ளும் விதத்தையும் மட்டும் வைத்துக் கொண்டு ஒரு முடிவுக்கு வராதே. உனக்குப் பிடிக்காத ஒரு மறுபக்கம் அவனுக்கு இருக்கலாம். அதனால் காதல் என்று முடிவுக்கு வருவதற்கு முன்பு நிறைய யோசி.''

- ஜி.எஸ்.எஸ்.

அட்டை, படங்கள் : ஸ்ரீஹரி

# கல்விப் பிரச்னை!



- அமரர் கல்கி

நம்மிலே பலர் நம் குழந்தைகளின் பாடப் புத்தகங்களைப் புரட்டிப் பார்ப்பதில்லை. பரீட்சைத் தாள்களையும் வாங்கிப் பார்ப்பதில்லை. அப்படிப் பார்த்தால் நம்முடைய ஹைஸ்கூல் கல்வியில் வாழ்க்கைக்குப் பயனற்ற - அறிவு வளர்ச்சிக்கு அவசியமில்லாத - குப்பைக் கூளங்கள் எவ்வளவு நிறைந்திருக்கின்றன என்பதைக் காண்போம்.

நமது முறையைச் சீர்திருத்த நமது மாஜி கல்வி மந்திரி செய்த முயற்சிகள் பல. அவையெல்லாம் உருப்படாமற் போனதன் காரணம், கல்வி முறையில் உள்ள அடிப்படையான கெடுதலை அகற்றாததுதான்.

உள்ளேயிருக்கும் நோயைத் தீர்க்காமல் மேலே எவ்வளவு சிம்பு வைத்துக் கட்டினாலும் பயனில்லை. உடம்பு பலம் அடையாது.

குப்பை கூளத்தை அகற்றாமல் வீட்டுக்குள் பன்னீரைத் தெளிப்பதில் யாதொரு பயனுமில்லை.

வௌவால்களை விரட்டாமல் அழகிய மேஜை நாற்காலிகளை வாங்கிப் போடுவதில் என்ன உபயோகம்?

நமது ஹைஸ்கூல் கல்வியில் முதல் பாரத்திலிருந்து ஆறாவது பாரம் வரையில், இப்போது வைக்கப்பட்டிருக்கும் பாடங்களைப் பாதியாக்குங்கள்.

தினம் ஒரு வேளை - இரண்டரை மணி நேரம் பள்ளிக்கூடம் போதும் என்று செய்யுங்கள்.

இதன் மூலம் இப்போது ஆயிரம் பிள்ளைகள் வாசிக்கும் ஹைஸ்கூலில், இதே பணச் செலவில் இரண்டாயிரம் பிள்ளைகள் படிக்கும்படி செய்யலாம்.

கட்டடப் பிரச்னை மலை போலத் தோன்றி லோபோ பிரபு போன்றவர்களைப் பயமுறுத்தாது. பணச் செலவை நினைத்துக் கதிகலங்கி மூர்ச்சையடைந்து விழ வேண்டியதில்லை!

அரசாங்கத்துக்கு அதிகச் செலவு இல்லை. அதிகப் பிள்ளைகள் - இரட்டிப்புப் பிள்ளைகள் - படிக்கலாம்.

பிள்ளைகள் அநாவசியமான விஷயங்களை உருத்தள்ளி மூளையைக் கெடுத்துக் கொள்ளாமல், அவசியமான கல்வி கற்றுக் கடைத்தேறுவார்கள்.

காலையில் இரண்டரை மணி நேரம் பள்ளிக்கூடம், போய் விட்டு வரும் பிள்ளைகள் மத்தியானத்தில் படிக்க இஷ்டமிருந்தால் படிக்கட்டும். வேலை செய்ய வசதியிருந்தால் செய்யட்டும். கைத்தொழில் கற்றுக் கொள்ளச் சாதனம் இருந்தால் கற்றுக் கொள்ளட்டும். விளையாட்டில் விருப்பமிருந்தால் விளையாடட்டும். அல்லது ஊர் சுற்றட்டும்; வயல் காடுகளில் திரியட்டும்; இயந்திர



சாலைகளுக்குப் போய் வேடிக்கை பார்க்கட்டும்; ரயில் ஓடுவதைப் பார்க்கட்டும்; ஆகாய விமானத்தை அண்ணாந்து பார்க்கட்டும்.

அல்லது, சோம்பேறித்தனமாகச் சும்மா உட்கார்ந்திருக்கட்டும்.

பள்ளிக்கூடத்தில் கொஞ்சம் படித்துவிட்டு மற்றப் பொழுதை மேற்கண்டவாறெல்லாம் கழிக்கும் பிள்ளைகளின் மனதிலேதான், படித்த படிப்பு நன்றாகத் தங்கி ஜீரணமாகும்.

அத்தகைய பிள்ளைகள்தான் நல்ல உடல் நலத்துடன் வளருவார்கள். வெளி உலகத்தை அறிவார்கள்.

வேலையில்லாத் திண்டாட்டம் அவர்களைப் பேய் போலப் பயமுறுத்தாது. எப்படியும் பிழைத்துக் கொள்ளலாம் என்ற தைரியம் பெறுவார்கள்.

இப்படிச் சோம்பியிருந்தும் ஊர் சுற்றியும் வளர்ந்த பிள்ளைகளில் பலர் உலகத்தில் மகத்தான காரியங்களைச் சாதித்திருக்கிறார்கள்

பள்ளிக்கூடப் பாடங்களைப் படிக்காமல் உச்சி மோட்டைப் பார்த்துக்கொண்டு படுத்திருந்த சிறுவர்கள் சிலர், பிற்காலத்தில் உலகத்தின் மிகப் பெரிய மேதாவிகளாகியிருக்கிறார்கள்.

மறுபடியும் சொல்கிறோம்: நம்முடைய நாட்டில் கல்விப் பிரச்னையைத் தீர்த்து வைப்பதற்கு வழி இதுதான்.

ஒரு வேளைப் பள்ளிக்கூடம் -

இரண்டரை மணிப் படிப்பு!

காலையில் வரும் பிள்ளைகளுக்கு மத்தியானம் பள்ளிக்கூடம் கிடையாது. மத்தியானம் வருகிறவர்களுக்குக் காலையில் கிடையாது.

இந்த முறையைக் கொண்டு தான் சென்னை மாகாணத்து எழுபது லட்சம் குழந்தைகளுக்கும் உடனடியாக ஆரம்பக் கல்வி அளிக்க முடியும்.

இந்த ஒரு வழியிலேதான் நம்முடைய குழந்தைக் குலத்தின் மூளையும் உடல் நலமும் கெட்டுப் போகாமல் காப்பாற்றலாம்.

இந்த ஒரு மருந்தினாலேயே நமது கல்வி முறையைப் பிடித்துள்ள கடும் நோயைப் போக்கலாம்.

இந்த ஒரு முறையினாலேயே கல்விக்காகப் பொதுஜன சர்க்கார் செலவு செய்யும் பணமெல்லாம் விரயமாகாமல் பயன்படச் செய்யலாம்.



விரிவாகப் படிக்க
www.kalkionline.com பார்க்கவும்.

கடந்த வருடம் 2003-ல் உலக சுகாதார நிறுவனம் No Tobacco Day என்ற தீம் வைத்து, சிகரெட் புகைக்கு எதிராக இயங்கியது. ஆச்சர்யவசமாக கடந்த ஜூன் மாதம், தமிழ் சினிமா உலகம் இனிமேல் படங்களில் அடிக்கடி சிகரெட் பிடிக்கிற காட்சிகளை வைப்பதில்லை, என்று உறுதி செய்தது. (படித்த ஞாபகம்) சிகரெட்டின் இந்த கொடூர பாப்புலாரிட்டிக்குக் காரணம் என பெரும்பாலோர் நினைப்பது சினிமாவின் தாக்கம்தான்.

இப்போது எதிர்க்குரல்கள் எழுந்தாலும், ஆரம்பத்தில் ஹாலிவுட் படங்களில் வைக்கப்பட்ட சிகரெட் பிடிக்கிற காட்சிகள் இளமையின், காதலின் அடையாளமாகப் பார்க்கப்பட்டது. என் மோசமான கவனத்தின்படி பார்த்தால், ஹம்பரி போகார்ட்டும், லாரென் பாகாலும் புகைவளையத்தை தம்மைச் சுற்றி விட்டபடி சினிமாவில் காட்சி தந்த போதுதான், இளைஞர்களுக்கு சர்வேபடி சிகரெட்டின் மேல் அதிகக் காதல் வந்தது என்று நினைக்கிறேன். பின்னாளில் பெண்களுக்கும் சிகரெட் பிடிக்கிற ஆசையைத் தூண்டி, புண்ணியம் கட்டிக் கொண்டவர் ஷரான் ஸ்டோன்.



# சிகரெட் சில சிகரெட்ஸ்

சமீபத்தில் ஜோ எஸ்டர் ஹஸ் என்கிற ஸ்கிரிப்ட் ரைட்டர், தமது பேட்டியில் (பேஸிக் இன்ஸ்டிங்க், ஷோ கேர்ள்ஸ் எல்லாம் இவர் கைவண்ணம் தான்) இப்படிச் சொல்லியிருந்தார். "ஒரு ஹாலிவுட் நடிகரின் கையில் இருக்கிற சிகரெட் துப்பாக்கி போன்றது.. அது பன்னிரண்டு முதல் பதினான்கு வயதுச் சிறுவர்களைக் குறி வைக்கிறது..."

இப்படி எல்லோரும் அலறி இப்போது சிகரெட்டுக்கு எதிராகக் குரல் கொடுத்திருப்பதன் காரணம், சிகரெட் கான்ஸர் அதிகரித்திருப்பதால்தான். என்னிடம் கூட பல சிகரெட் நண்பர்கள் விசாரிக்கிறார்கள். 'முன்பெல்லாம் இரண்டு பாக்கெட் குடிப்பேன்... இப்போது மொத்தமே நான்கு அல்லது ஐந்துதான்.... கான்ஸர் வர வாய்ப்புக் குறையுமில்லையா...?' என்கிறார்கள்.




சமீபத்தில் மினிஸோட்டா பல்கலைக் கழகத்தில், டாக்டர் ஸ்டீபன் ஹெக்ட் தலைமையில் ஒரு ஆய்வு நடந்தது. புகைக்கிற சிகரெட்டின் எண்ணிக்கையைக் குறைத்துக் கொண்டால், புற்று

ஹலோ, நீங்க சுகமா?



வஸந்த் செந்தில்



''அப்பா, அப்ளிகேஷன்ல 'மதர் டங்'னு போட்டிருக்கிறதே. என்னப்பா எழுதணும்?''
'''ரொம்ப நீளம்'னு எழுதுடா!''
- எம். அசோக்ராஜ்

நோய் வருகிற வாய்ப்புக் குறையுமா? இது தான் கேள்வி, ஆய்வின் நோக்கம்.

நூற்று ஐம்பத்தி மூன்று சிகரெட்டர்கள் ஆய்வில் இருந்தார்கள். தினமும் இருபத்தி மூன்று சிகரெட் முழுதாகப் பிடிக்கிறவர்கள். இவர்கள் எழுபத்தைந்து சதவிகித சிகரெட்டைக் குறைத்தார்கள், தொடர்ந்து இருபது வாரத்திற்கு. பிறகு இவர்களின் இரத்தத்தில் இருக்கிற NNL என்கிற புற்றுநோய் உருவாக்குகிற சிகரெட்டில் இருந்து உடலுக்குப் போகிற வேதிப்பொருள் கணக்கிடப்பட்டது. இந்த NNL அளவு இப்படியே 4,6,8,12 மற்றும் 24 வாரங்களின் முடிவில் கணக்கிடப்பட்டன. முடிவு அறிவிக்கப்பட்டது. NNL அளவு சுத்தமாகக் குறையவே இல்லை. ஒருவர் பயங்கர சிரமப்பட்டு இரண்டு சிகரெட்தான் குடித்தார். அவருக்கும் அளவு குறையவில்லை. சும்மா சிகரெட் வாசனையை ஒரு மூக்கால் பிடித்தால்கூட, இரத்தத்தில் NNL அளவு அதிகரிக்கும் போல ஆய்வு முடிவு வெளிவந்தது. நுரையீரல் புற்றுநோய் வராமலிருக்க வேண்டும் எனில், சிகரெட்டை சுத்தமாகக் கைவிட வேண்டும். குறைக்கிற பிஸினஸ் உங்கள் சம்பளத்திற்கு வேண்டுமானால் உதவலாம். புற்றுநோய் இரக்கம் காட்டாது என்பதே முடிவாக அறிவிக்கப்பட்டது. .

சுற்றி நின்று புகைப்பவர்களுடன் கதை பேசிக் கொண்டே, அந்த வட்ட வட்ட புகை வளையங்களை நெஞ்சுக்குள் வாங்கிக் கொள்கிறவர்களைப் பற்றி, மற்றொரு அமெரிக்க மருத்துவக்குழு ஆய்வு நடத்தியது. இவர்கள் புகை பிடிப்பதில்லை. புகை இழுக்கிறார்கள். இவர்களை secondhand smokers என்கிறார்கள். இவர்களது நுரையீரலும் அனாவசியத்திற்கு பாதிப்படைவதைத் தடுக்க ஏதாவது செய்ய முடியுமா என்று யோசித்தார்கள். இம் மாதிரி சிகரெட் புகைக்கு நடுவே பேசிக் கொண்டிருக்கிற, புகை பிடிக்காதவர்கள் அறுபத்தியேழு பேர் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டார்கள். அவர்களுக்கு தினமும் வைட்டமின் சி 500mg. அளவில் கொடுக்கப்பட்டது. முடிவில், அவர்களது இரத்தத்தில் $F_2$ Isoprostane அளவு கணக்கிடப்பட்டது. இதுதான் இதயத்தின் இரத்தக் குழாய்களில் அடைப்பு ஏற்படுத்துகிற துர்சமாச்சாரம். பார்த்தால், வைட்டமின் சி எடுத்துக் கொண்டவர்களிடம் இது குறைந்திருந்தது. பேராசிரியர் ப்ளாக் உலகத்துக்கு அறிவித்தார்: 'சிகரெட் பிடிக்காமல் புகை பிடிப்பவர் நீங்களென்றால், நிறையப் பழங்களும், காய்கறிகளும் சாப்பிடுங்கள். இதய அடைப்பு தடுக்கப்படும். பயந்தால், கூடவே வைட்டமின் சி, டாக்டரின் ஆலோசனையோடு.'

மற்றொரு ஆஸ்திரேலிய மருத்துவக் குழுவினர், இம்மாதிரி புகைச்சூழலில் சிக்கிக் கொண்டிருக்கும் குழந்தைகளை ஆய்வு செய்தார்கள். அந்தக் குழந்தைகளின் சிறுநீரகத்தில் இருக்கும் நிகோடினின் அளவு கணக்கிடப்பட்டது. அதிகம் இருக்கிற குழந்தைகள் ஆஸ்துமா, நுரையீரல் தொற்று நோய்கள், காதுக் கோளாறுகள் உட்பட, திடீரென்று இறந்து விடுகிற (மூச்சடைத்து) அபாயத்திலும் இருக்கின்றன என்று அறிவித்தார்கள். அவர்கள் வெளியிட்ட கார்ட்டூனில், குழந்தையின் இரு நாசித் துவாரங்களிலும் இரண்டு சிகரெட்டுகள் சொருகப்பட்டிருந்தன. பார்த்த பலர் பயந்து நடுங்கி விட்டார்கள்.

இத்தனைப் பிரச்னைகள் இருந்தாலும், சிகரெட்டை யாரும் விட முடியாமல்தான் இருக்கிறார்கள். அவர்களுக்காக 'பாதுகாப்பான சிகரெட்' தயாரிக்க முடியுமா என்ற ஆய்வும் நடந்து வருகிறது. சிகரெட்டில் ஃபில்டரின் அளவைக் குறைத்துப் பார்த்து ஆய்வு நடத்தினாலும், சிகரெட் நூறு சதவிகிதம் அபாயகரமான வஸ்துவாகவே இருக்கிறது. நிகோடின் நிச்சயமாக புற்றுநோயின் விதை என்று உறுதிப்படுத்தப் பட்டு விட்டது. இந்த பாதுகாப்பான சிகரெட்டைப் பற்றி சில டாக்டர்கள் குழு கமெண்ட் அடித்தது. ''பாதுகாப்பு என்ற பெயர் சொல்லி இவர்கள் மேலும் சிகரெட்டை பிரபலப்படுத்துகிறார்கள்'' ஒற்றை வரியில் சொன்னால், சிகரெட் நச்சுப் பாம்புடைய நாக்கின் ஸ்பரிஸம். (தொடரும்)

# தடாலடித்

நமக்கே உரிமையாம் 21

ப.சிதம்பரம்

நன்மையே பயக்கும் என்று எடுக்கப்படும் முடிவுகளில் சில, எதிர்மறையான பின் விளைவுகளை ஏற்படுத்திவிடுகின்றன என்று குறிப்பிட்டேன். இதற்கு இன்னும் பல உதாரணங்களை எடுத்துக் கூறலாம்.

நாடாளுமன்றத்திலும்,- சட்டமன்றத்திலும், பல சட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. ஒவ்வொரு சட்டத்திற்கும் ஒரு முன்னுரை எழுதப்படும். அதற்குப் பெயர் "இந்தச் சட்டத்தின் நோக்கங்களும் காரணங்களும்" (Statement of Objects and Reasons) நோக்கங்களைப் படித்தால் உயர்ந்த நோக்கங்களாகவே தோன்றும். காரணங்களைப் படித்தால் நியாயமான காரணங்களாகவே தோன்றும். ஆனால், அந்தச் சட்டத்தின் வாசகங்கள் விபரீதமான விளைவுகளை ஏற்படுத்திவிடக் கூடியவையாக அமைந்திருக்கும்!

1980களில் பஞ்சாபில் பிரிவினை இயக்கமும், வன்முறையும், பயங்கரவாத நடவடிக்கைகளும் தலையெடுத்தன. பிரதமர் இந்திரா காந்தி சுட்டுக் கொல்லப்பட்டார். தொடர்ந்து நடைபெற்ற பொதுத்தேர்தலில், ராஜீவ் காந்தியின் தலைமையில் காங்கிரஸ் கட்சி மிகப் பெரிய வெற்றியைப் பெற்றது. ராஜீவ் அரசு 'தடா' என்ற சட்டத்தை நாடாளுமன்றத்தில் நிறைவேற்றியது. 'தடா' என்பதனுடைய முழுப் பெயர் "பயங்கரவாத மற்றும் பிரிவினைத் தடுப்புச் சட்டம்." பயங்கரவாதத்தைத் தடுக்கும் நோக்கம் பிழையானது என்றோ, பிரிவினையைத் தடுக்கும் நோக்கம் தவறானது என்றோ யார் கூற முடியும்? ஆனால் சட்டத்தின் வாசகங்கள் எப்படியிருந்தன?

ஒரு மாநிலத்திலோ, மாநிலத்தின் பகுதியிலோ, பயங்கரவாதச் செயல்கள் நடைபெறக் கூடும் என்ற சூழ்நிலை இருந்தால், அந்தப் பகுதி, அல்லது மாநிலம் முழுவதும் "பாதிக்கப்பட்ட பகுதி" என்று அறிவிக்கும் அதிகாரம் மாநில அரசுக்குத் தரப்பட்டது. "பாதிக்கப்பட்ட பகுதி" என்று அறிவித்த பிறகு, அந்தப் பகுதியில் இருக்கும் யார் மீதும் தடா சட்டத்தைப் பயன்படுத்தும் அதிகாரமும் மாநில அரசுக்குத் தரப்பட்டது.

யார் மீதாவது சந்தேகம் இருந்தால், அவரைக் கைது செய்யலாம்; விசாரணை இல்லாமல் சில காலம் சிறையில் அடைக்கலாம்; அவர் ஜாமீனில் வெளியே வர முடியாது என்று கடுமையான பிரிவுகள் சட்டத்தில் இருந்தன.

ஒரு நேர்மையான மாநில அரசு இந்த வானளாவிய அதிகாரங்களைப் பொறுப்புடனும், கவனத்துடனும் பயன்படுத்தும் என்ற நம்பிக்கையில் இச் சட்டம் வடிக்கப்பட்டது. ஆனால் நடந்தது என்ன?



ஓர் உதாரணத்தைச் சொல்கிறேன். பஞ்சாபில் பயங்கரவாதம் தலையெடுத்தது. ஆனால், அண்டை மாநிலமான குஜராத் மாநில அரசு, குஜராத் மாநிலம் முழுவதும் "பாதிக்கப்பட்ட பகுதி" என்று அறிவித்தது! குஜராத் அரசு ஆயிரக்கணக்கானவர்களைக் கைது செய்து, அவர்கள் மீது தடா சட்டத்தை மீறியதாக வழக்குகளைப் பதிவு செய்தது.

உள்துறை அமைச்சராக இருந்த எனக்கு, நூற்றுக்கணக்கான புகார்கள் வந்தன. அவற்றை விசாரிப்பதற்கா அகமதாபாத் நகருக்குச் சென்றேன். அகமதாபாத் நகருக்கு அருகில், புதிதாக உருவாக்கப்பட்ட காந்திநகர்தான் குஜராத் மாநிலத்தின் தலைநகரம்.

முதலமைச்சர் சிமன்பாய் படேல் இல்லத்தில் ஆய்வுக் கூட்டம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. முதலமைச்சர், தலைமைச் செயலாளர், உள்துறைச் செயலாளர், காவல் துறைத் தலைவர் என்று பல அதிகாரிகள் குழுமியிருந்தனர். தடா சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டவர்களின் பெயர்ப் பட்டியல்கள் என்னிடம் தரப்பட்டன. வரிசையாகப் பெயர்களை மௌனமாகப் படித்துக் கொண்டே வந்தேன். முதல் பெயர் ஒரு

முஸ்லிம் குடிமகனின் பெயர். இரண்டாவது பெயரும் அப்படியே. மூன்றாவது பெயரும் அப்



# தடா!

படியே. இதைப் போல் நூற்றுக்கும் மேற்பட்ட பெயர்கள். அபூர்வமாக ஓர் இந்துக் குடிமகனின் பெயர் இடையில் தென்படும். ஆனால் அந்தப் பெயர்ப் பட்டியல்களில், தொண்ணூறு சதவிகிதப் பெயர்கள் முஸ்லிம் குடிமக்களின் பெயர்கள்.

என் இதயத்தில் வேலைப் பாய்ச்சியதைப் போல் ஓர் உணர்வு. "அடடா, இந்தத் தடாச் சட்டத்தைக் கொண்டு வருவதற்கு நாமும் ஒரு காரணியாக இருந்து விட்டோமே" என்று வருந்தினேன்.

குஜராத் மாநில உள்துறைச் செயலாளர் விட்டல் ஒரு தமிழர். பிற்காலத்தில் மத்திய அரசின் செயலாளராகவும், பிறகு மத்திய விஜிலன்ஸ் கமிஷனராகவும் பணியாற்றியவர். அவரிடம் மெல்லிய குரலில் தமிழில், "என்ன விட்டல், இந்தப் பட்டியல் அநியாயமான பட்டியலாக இருக்கிறதே" என்று கேட்டேன். அவர் கூறிய பதில் என்னை அதிர்ச்சியடையச் செய்தது. அவர் சொன்னார்: "தடா சட்டம் என்னவோ மாநில அரசுக்குத்தான் அதிகாரங்களை வழங்குகிறது. ஆனால் மாநில அரசு என்பது என்ன? முதல் தகவல் அறிக்கையைப் பதிவு செய்பவர் காவல் நிலைய அதிகாரி. புலன் விசாரணை செய்பவர் காவல் துறை அதிகாரி. வழக்குப் பதிவு செய்பவர் காவல்துறை அதிகாரி. ஒவ்வொரு காவல் நிலையத்திலும் நான் போய் உட்கார்ந்து, ஒவ்வொரு முதல் தகவல் அறிக்கையையும் பரிசீலனை செய்ய இயலாது. என்னிடம் அளிக்கப்படும் கோப்புகளை மட்டுமே நான் தலைமைச் செயலகத்தில் பரிசீலிக்கிறேன். மிக அநியாயம் என்று எனக்குத் தோன்றும் பல பரிந்துரைகளை மறுத்து வருகிறேன். ஆனால், என்னிடம் தடா சட்டத்தின் கீழ் ஆயிரம் பரிந்துரைகளைக் கொண்ட கோப்புகள் வந்தால், அந்த ஆயிரத்தில் தொள்ளாயிரம் கோப்புகளில் குற்றம் சாட்டப்பட்டவர் முஸ்லிம் சமுதாயத்தைச் சேர்ந்தவராக இருந்தால், நான் ஐம்பது பரிந்துரைகளை மறுக்க முடியும். ஆனால் எப்படி தொள்ளாயிரம் பரிந்துரைகளையும் மறுப்பது? ஆகவேதான் இது போன்ற பட்டியல்கள்" என்று வேதனையுடன் விளக்கமளித்தார்.



• விட்டல்

நல்ல நோக்கங்களுடன், நியாயமான காரணங்களுக்காக நிறைவேற்றப்பட்ட சட்டம், காவல் நிலைய அதிகாரிகளின் கைகளில் சிக்கிச் சீரழிவதை நான் நேரடியாகப் பார்த்தேன். "குரங்கு கையில் பூமாலை" என்ற பழமொழிதான் என் நினைவுக்கு வந்தது.

பிறகு, குஜராத் மாநிலத்தில் தடா குற்றம் சுமத்தப்பட்டவர்களின் பட்டியல்களைத் தீர்க்கமாக ஆய்வு செய்து, நூற்றுக்கணக்கான வழக்குகளை வாபஸ் பெற்று, நூற்றுக்கணக்கான முஸ்லிம் தோழர்களை விடுவிக்க, உரிய உத்தரவுகளை மத்திய அரசு பிறப்பித்தது.

'தடா'வின் வாரிசு தான் 'போட்டா'.

மாநில அரசின் கைகளில் 'போட்டா' சட்டம் கிடைத்ததன் விளைவாக ஏற்பட்ட பாதகங்களையும், அநியாயங்

களையும் நீங்கள் நன்கு அறிவீர்கள். அவற்றை விளக்க வேண்டிய அவசிய மில்லை. நண்பர் வைகோ, ஐந்நூற்று ஐம்பத்தி ஏழு நாட்கள் சிறையில் இருந்த அநியாயம் ஒன்றே போதும்.

1985ஆம் ஆண்டு கட்சித் தாவல் தடைச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. இந்தச் சட் டத்தின் நோக்கங்களும் உயர்ந்த நோக்கங் களே. ஜனநாயகத்தில் ஒழுக்கம், கட்சிக் கட்டுப்பாடு வேண்டும் என்ற எண்ணம் பரவலாக இருந்தது. 'ஆயாராம் கயாராம்' (போன ராமன் வந்த ராமன்) என்று கட்சித் தாவல்கள் இருந்ததால், இந்தச் சட்டம் தேவை என்று உணரப்பட்டது. அதே நேரத்தில் உண்மையான கருத்து வேறுபாடு களை முடக்கிவிடக் கூடாது என்பதற்காக, மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள் விரும்பி னால், ஒரு கட்சியிலிருந்து பிரிந்து தனிக் கட்சி அமைக்கலாம் என்ற ஒரு பிரிவு சேர்க் கப்பட்டது. இந்தப் பிரிவு நடைமுறையில் எப்படிச் சிதைக்கப்பட்டது என்பதையும், கட்சித் தாவல் தடைச் சட்டமே கேலிக் குரியதாக ஆகியதையும் நீங்கள் நன்கு தெரிந்து வைத்திருப்பீர்கள். இருபத்தி யொரு உறுப்பினர்களைக் கொண்ட ஒரு கட்சியில், முதலில் ஏழு பேர் விலகுவது; பிறகு எஞ்சியுள்ள பதினான்கு உறுப்பினர் களில் ஐந்து பேர் விலகுவது என்று கட்சி களைப் பிளக்கும் சட்டமாக இந்தச் சட்டம் இருந்ததேயன்றி, கட்சித் தாவலைத் தடை செய்ய முடியவில்லை.

ஒரு சட்டத்தை நிறைவேற்றுவதற்கு முன் அதன் சொற்கள், மற்றும் வாசகங் களின் முழு வீச்சையும் பரிமாணத்தையும் ஆழமாகப் பரிசீலித்து, பின் விளைவுகளை ஆராய்ந்த பிறகே அதை நிறைவேற்ற வேண்டும். ஆனால் நம்முடைய சட்ட மன்றங்களில், கூட்டத் தொடரின் கடைசி நாளில், ஒரு மணி நேரத்தில் பதினைந்து சட்ட வடிவங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டு, சட்டங்கள் நிறைவேற்றப்படும் விந்தையைப் பார்க்கிறோம்!

தமிழ்நாடு சட்டமன்றத்திற்கான ஆண்டுச் செலவு எவ்வளவு தெரியுமா? 2003 - 04ஆம் ஆண்டில் ரூ. 12 கோடியே 76 இலட்சம். இந்தப் பன்னிரண்டு கோடி எழுபத்தியாறு இலட்சங்களுக்கான பயன், தமிழ்நாட்டு மக்களுக்குக் கிடைக்கிறதா என்பதே கேள்வி.

(தொடரும்)

# குவிஸ் போட்டி (14) முடிவுகள்

அசத்தல் ரூ. 10,000 பரிசு!

இந்த வாரம் பரிசை வென்றவர்:

எஸ். ரேவதி,
18. ராஜேந்திரப் பிரசாத் ரோடு,
கணேஷ் பிளாட்ஸ்,
நேரு நகர், குரோம்பேட்டை,
சென்னை - 600 044.

ஆறுதல் பரிசு ரூ. 100 பெறுபவர்கள்.

வி. விஜயலட்சுமி - கொட்டிவாக்கம், சியாமளா ராஜசேகர் - ராயபுரம், கே.ஜெய பாப்பா, பாளையங்கோட்டை, கி. ராஜ கோபாலன் - நெல்லை-1, லட்சுமி கணபதி - சென்னை-83, ஆர். ராஜ லட்சுமி - கரூர்-4, டி.எஸ். கிருஷ்ண மூர்த்தி, சென்னை-78, எஸ். நந்தினி மாசிலாமணி, மதுரை - 10, பி. பாஸ்கர் - வேலூர் - 12, எஸ். வாணீஸ்வரி - கோவை - 14, ஷியாமளா சுவாமிநாதன் - திருவனந்தபுரம் - 8.





பிடியுங்க 1000 பரிசை!

கே. வெங்கடேசன் - வேலூர், வி. கிருத் திகா சுப்ரமணியன்-ஸ்ரீரங்கம், எம். ஷோபனா- மேலூர், லெ.நா. சிவகுமார்- சென்னை-33, எம்.ஆர். சுவாதி-வேலூர்- 12, சி.எஸ். லோகநாதன்- செட்டிபாளை யம், வத்ஸலா ராகவன் - சேலையூர், ஆர். ஸ்வர்ண சுபா-நெல்லை-11. ராஜேஸ்வரி வெங்கட்ராமன் - அல்லூர்,

குவிஸ் போட்டி 14க்கான விடைகள்:

1. அனுமனைத் தவிர ராமாயண காலத்திலிருந்து மகாபாரதக் காலம் வரை வாழ்ந்த கதாபாத்திரம் ஜாம்பவான்/பரசுராமர்.

2. ரவீந்திர சேது என்னும் பாலத்தின் மற்றொரு பிரபலமான பெயர் ஹௌரா பிரிட்ஜ்

3. சாகர்மாதா என்று நேபாளத்தவரால் அழைக்கப்படும் சிகரம் எவரெஸ்ட்

4. ரயில் டிக்கெட்டுகளில் உள்ள PNR என்பதன் விரிவாக்கம் **Passenger Name Record**

5. சமீபத்தில் செவ்வாய் கிரகத் திற்கு அனுப்பப்பட்டு தொடர்பிழந்து போன பிரிட்டனின் விண்கலம் பீகிள்

6. ஐஸ்வர்யா ராய் நடித்த முதல் தமிழ்த் திரைப்படம் இருவர்.

# வட்டமேஜை




# மெகா சிறப்பிதழ்!

✉ ஆறு ரூபாய் செலவில் 'கல்கி' வாசகர்களைக் கும்பகோணத்துக்கு அழைத்துச் சென்று, ஊர் முழுவதும் சுற்றிக் காட்டி விட்டீர்கள். மகாமகத்துக்குப் போக முடியவில்லை என்றாலும், மகாமகக் குளத்தில் குளித்த திருப்தி!

சென்னை - 28,

காஞ்சனா ராதாகிருஷ்ணன்.

✉ வாசகரின் கோபத்திற்கு மதிப்புக் கொடுத்து, அவரது ஆதங்கத்தை முதல் பக்கமே வெளியிட்ட செயல், பாராட்டத்தக்கது.

ஈரோடு - 1,

ரேவதிப்ரியன்.

✉ பத்தோடு பதினொன்றாக இருக்க மாட்டோம் என்று சொல்லும் விஜயகாந்த் ரசிகர்கள், எதனோடாவது ஐக்கியமாகி, பதினொன்றாவதாக இல்லாமல் போய்விடக் கூடாது... எல்லாம் "சக்தி"மயம்!

திருநெல்வேலி - 11, ராதா ராமஸ்வாமி.

✉ அட்டை டு அட்டை, புரட்டப் புரட்ட பக்திமணம் கமழும் கட்டுரைகள், பேட்டிகள், தகவல்கள். அதிலும், மினி கல்கியில் இடம் பெற்றிருந்த மகாமக மகிமைகள், பக்தி ரசம் சொரிந்தன. மொத்தத்தில் மகாமகச் சிறப்பிதழாக வந்த தனி கல்கி, ஒரு மெகா சிறப்பிதழ்தான்.

பூனாம்பாளையம்,

ஆர். சரஸ்வதி ராஜேந்திரன்.

✉ 'கிரிக்கெட் அரசியல்' தலையங்கம் படித்தேன். நமது இந்திய கிரிக்கெட் அணி பாகிஸ்தான் சென்று விளையாடுவது தொடர்பாக எழுந்துள்ள அரசியல் நிலையை நன்கு அலசியிருந்தீர்கள். இரு நாட்டு உறவில் ஆரோக்கியமான சூழ்நிலையை, நிச்சயம் இந்த கிரிக்கெட் போட்டிகள் உருவாக்கும்.

மொரட்டுப்பாளையம்,

இரா. வி. சௌந்தர்யா விசாலினி.

✉ 'மார்க் வாங்கலாம் வாங்க' பகுதியில் 'துண்டுச் சீட்டுத் திட்டம் - தினசரிச் சட்டம்' மிகவும் அருமையான ஒன்று. இதன்படி மாணவர்கள் திட்டம் போட்டுப் படித்தால், நல்ல மதிப்பெண்கள் வாங்குவது நிச்சயம்.

மதுரை, ஆர். பிருந்தா.

✉ தேர்தல் சமயத்தில் பிரதமருக்கே அரசு விமானம் கூடாது. அது எதிர்க்கட்சிக்கு இல்லாத சலுகை, ஆளும்கட்சிக்குக் கிடைத்ததாகி விடும் என்று காங்கிரஸ் ஆட்சியில் இருந்த போது தேர்தல் கமிஷனிடம் வாதாடிய அத்வானி, தற்போது துணைப் பிரதமராகிய தனக்கு அந்தச் சலுகை வேண்டும் என்று கோரிய அவலத்தை, அக்கிரமத்தை, அரசியல் அசிங்கத்தை, அழகாகச் சுட்டிக்காட்டியது ''செய்திகள் திரிப்பது செம்பியன்'' பகுதி.

திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

✉ அன்னதான சிவன் நினைவலைகளும், அமரர் கல்கியின் குடந்தை சோதிடர் ஊர் வர்ணனையும், முந்திரி திராட்சையாய் ருசித்தது.

ஈரோடு, டி. சந்திரன்.

✉ பழனி ஜி. பெரியசாமியின் பேட்டியைப் படித்தேன். நகரத்தில் தனது ஸ்டார் ஹோட்டலில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் சந்தோஷமாக இருந்தால்தான், தொழில் நல்லபடியாக நடக்கும் என்பதை உணர்ந்து, அவர்களுக்குச் சகல வசதிகளையும் செய்து கொடுத்திருக்கும் அவரது வியாபார யுக்தி, இன்றைய நிலையில் நாட்டுக்கும் நல்லது.

லால்குடி. எம். இராஜேந்திரன்.

● 'தலைவன்' படத்தில் எம்.ஜி.ஆருடன் நாகேஷ்

# "முருகா முருகான்னு திட்டுவாருங்க!"

அதிலே ஆரம்பித்தது தான். அதற்குப் பின், தேவர் பிலிம்ஸ் படங்களில் எனக்கு ஏதாவது ஒரு ரோல் கண்டிப்பாக இருக்கும்.

சின்னப்பா தேவர், பலவிதமான குணங்களின் கலவையான மனிதர். தலைசிறந்த நிர்வாகி. கறாரான தயாரிப்பாளர். மக்களின் ரசனை அறிந்த சினிமாக்காரர். சட்டென்று கோபம் வந்து விடும். அதீத பக்திமான். அவருடைய முருக பக்தியின் ஆழம் எப்படிப்பட்டது என்பது பலருக்குத் தெரியாது.

எப்போது பார்த்தாலும் 'முருகா! முருகா!' தான். என்ன சொன்னாலும் கூடவே ஒரு 'முருகா!' சேர்த்துக் கொள்ளத் தவறமாட்டார். அவர் மற்றவர்களைத் திட்டுகிற போதும் இது பொருந்தும். மனிதர்களை மட்டுமின்றி, அவர் கும்பிடும் முருகனையும் அவர் திட்டுவார். 'நிந்தா ஸ்துதி' என்பார்களே அதுபோல, அவர் முருகனை கன்னா பின்னாவென்று திட்டுவார். அப்போது பல்வேறு கெட்டவார்த்தைகளும் வெகு சகஜமாக வரும்.

ஒரு முறை காளைச் சண்டைக் காட்சியைப் படம் பிடிக்க, எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன. நாலு பக்கமும் கேலரி அமைக்கப்பட்டிருந்தது. அவற்றில் மக்கள் உட்கார்ந்திருப்பார்கள். ஹீரோ வந்து விட்டார். காளை மாட்டுப் பயிற்சியாளர் காளையைப் பிடித்துக் கொண்டு நின்றார். கேமரா மேன் படம் பிடிக்கத் தயாராக இருந்தார். ஆனால் சூரியன் சதி செய்து கொண்டு இருந்தது. படப்பிடிப்புக்குத் தேவையான வெயில் இல்லை.

கொஞ்ச நேரம் பொறுமையுடன் காத்திருந்தார் தேவர். வெயில் வருவதாகக் காணோம். தேவருக்கு எப்போதும் ஒரு பாலிஸி உண்டு. காலை ஏழு மணிக்கு ஷூட்டிங் என்றால், கரெக்டாக ஏழு மணிக்கு படப் பிடிப்பை ஆரம்பித்து விடவேண்டும். நடிக, நடிகையரோ இல்லை, மற்ற டெக்னிஷியன்களோ தப்பித்தவறி லேட்டாக வந்துவிட்டால், சகட்டு மேனிக்குத் திட்டி விடுவார். பெரிய பெரிய

சிரித்து வாழ வேண்டும் 31



நாகேஷ்

ஹீரோக்கள் கூட அவரிடம் திட்டு வாங்கி யதை நான் பார்த்திருக்கிறேன்.

அன்றைய தினம் எல்லாரும் ரெடி. வெயில் இல்லை என்றதும், அண்ணாந்து பார்த்தபடி, "முருகா! அறிவு இல்லையா உனக்கு? வெயில் இல்லைன்னா எப்படி நான் படம் எடுக்கறது?" என்று ஒரு சத்தம் போட்டார்.

தொடர்ந்து, "எல்லாரும் முருகா! முருகான்னு கத்துங்க! மூணுவாட்டி கத்துங்க!" என்றார்.

அங்கே திரண்டிருந்த மொத்தப் பேரும் உரக்கக் கத்தினார்கள்.

"ம்... ஏன் நிறுத்திட்டீங்க? இன்னும் ரெண்டு தடவை கத்துங்க" என்றார். தானும் கூடவே கத்தினார்.

எனக்கு இதையெல்லாம் பார்க்க ரொம்ப விசித்திரமாக இருந்தது. அதற்காக, வாயை மூடிக் கொண்டு சும்மா இருக்க முடியுமா? நானும் மற்றவர்களுடன் சேர்ந்து கொண்டு, "முருகா! முருகா!" என்று கத்தினேன்.

இரண்டே நிமிஷம்தான். மேகமூட்டம் விலகி, பளீரென்று வெயில் அடித்தது பாருங்கள்! அனைவரது கண்களும் ஆச்சரி யத்தில் விரிந்தன.

அன்று காளைச் சண்டை சம்பந்தப் பட்ட எல்லாக் காட்சிகளையும் எடுத்து முடித்து, பேக்-அப் சொல்லுகிறவரை, வெயில் தொடர்ந்து அடித்துக் கொண்டே இருந்தது. அன்று முழுக்க தேவர், "முருகா! என்னைக் காப்பாத்திட்டப்பா முருகா!" என்று மனசு நெகிழ்ந்து போய், சொல்லிக் கொண்டே இருந்தார்.

அதேபோல, இன்னொரு சம்பவம். வடபழனி கோயிலைப் போல, ஒரு செட் போட்டிருந்தார்கள். கோயில் நுழை வாயிலுக்கும், கருவறைக்கும் இடையில் மூன்று பிராகாரங்கள் இருந்தன. ஒரு மயில், முதல் நுழைவாயிலிலிருந்து புறப்பட்டு, பறந்தபடியே ஒவ்வொரு பிராகாரமாகக் கடந்து, முருகன் சன்னதியின் முன் போய் உட்கார வேண்டும் என்பது காட்சி. மயில் பயிற்சியாளர், முதல் நுழைவாயிலுக்கு அருகில் நின்று கொண்டு, மயிலைத் தூக்கி எறிந்து, பறக்க விட்டார். மயில் முதல் வாயிலைக் கடந்தபோது அதன் இறக்கைப் பகுதி நுழை வாயிலில் பட்டு, மயில் கீழே விழுந்தது.

"என்ன முருகா! உன் மயில் சரியாப் பறக்க மாட்டேங்குது?" என்றார் தேவர்.

மயில் மறுபடி பறக்கவிடப் பட்டது. மறுபடியும் வாயிலில் இடித்துக் கொண்டு கீழே விழுந் தது.

"முருகா! என் கூட விளை யாடாதே! இந்தத் தடவை மட்டும் ஒழுங்காப் பறக் கலைன்னா, எனக்குக் கெட்ட கோவம் வந்திடும்! வீணா திட்டு வாங்காதே!" என்று முருகனை எச்சரித்துவிட்டு, மயில் பயிற்சியாளரிடமிருந்து மயிலை வாங்கி, கையில் பிடித்த படி சில விநாடிகள் பிரார்த்தனை செய்துவிட்டு, தானே மயிலைப் பறக்க விட்டார்.

ஆஹா! என்ன ஆச்சரியம்! இந்த முறை மயில், மினி விமானம் போல, இலகுவாகப் பறந்து சென்று, முருகனின்

## பேயா, மனுஷியா?



'சூலம்' தொடரை தயாரித்த 'சரிகம' நிறுவ னம், 'ராஜராஜேஸ்வரி'யைத் தயாரித்திருக்கிறார்கள். ஞாயிறன்று இரவு ஒன்பது மணிக்கு 'சன்'னில் ஒளிப்பரப் பாகும் இதுவும் தெய்வக் கதை தான். மனநல மருத்துவரான ஹீரோ பிருத்விராஜுக்கு, ராஜ ராஜேஸ்வரி என்ற பெண்ணைத் திருமணம் முடித்து வைக்க முயற்சிக்கிறார்கள். "அந்தப் பெண்ணா? வேண்டாம்" என மறுக்கிறார் ஹீரோ. என்ன கார ணமாம்? ஹீரோ, அவளை ஒரு நாள் பேயாகப் பார்க்கிறாராம்! இதோடு முடிந்துவிடவில்லை. அவள் பேயா? மனுஷியா என்ற உண்மை வெளியில் தெரிய வரும் போது... ஷாக்! 'என்ன ஷாக்' என்பதை இப்போது சொல்லமாட்டார் களாம்!

— அப்பு

சன்னதி முன்னால் கீழே இறங்கி உட்கார்ந்தது.

அந்தக் காட்சியை எடுத்து முடித்த போது, 'முருகா! முருகா!' என்று நன்றிப் பெருக்கில் ரொம்பவே உணர்ச்சி வசப்பட்டு விட்டார் தேவர்.

என் மீது தேவருக்கு ரொம்ப பிரியம். நானும் அவரிடம் சகஜமாகப் பழகுவேன். ஒரு நாள் அவரிடம் தமாஷாக, "தேவரே! உங்க பேரை 'சாண்டோ' எம்.எம்.ஏ. சின்னப்பா தேவர்னு போட்டுக்கறீங்க! ஆனா, நான் பார்த்து நீங்க யாரோடயும் சண்டை போட்டதில்லையே!'' என்று கேட்டேன். அதற்கு பலமாகச் சிரித்து விட்டு, "நான் சண்டை போட்டு நீ பார்த்ததில்லையா! என்னப்பா நீ! ஷூட்டிங்குல தான் தினமும் திருமுகத்துகிட்ட, ஏண்டா இப்படி மறுபடி மறுபடி டேக் எடுத்து, பிலிமை வேஸ்ட் பண்ணறேன்னு சண்டை போட்டுக்கிட்டே இருக்கேனே!"என்றார்.

நான் அவரது நகைச்சுவையை ரசித்தேன்.

வசன கர்த்தா ஆரூர்தாஸ், தேவரின் பல படங்களுக்கு வசனம் எழுதியவர். அவர் ஒரு நாள் ஷூட்டிங்கில் இடைவேளையின் போது ஒரு பக்கமாய் உட்கார்ந்து, எதையோ எழுதிக் கொண்டு இருந்தார். பின்னால் ஏதோ நிழலாட, திரும்பிப் பார்த்தார். அங்கே நின்று கொண்டிருந்த தேவர், "அட! இங்க பாரு முருகா! என்கிட்ட சம்பளம் வாங்கிக்கிட்டு, என் வேலையைப் பார்க்காம, வீட்டுக்குக் கடுதாசி எழுதிக்கிட்டிருக்கான்!" என்றார் உரக்க.

"இல்லை அண்ணே!" என்று ஆரூர்தாஸ் சமாதானம் சொல்ல முயல, "சீன் எழுதச் சொன்னா, சொந்த வேலையைப் பார்க்கறே! சீன் எழுதுப்பா முதல்ல!" என்றாரே பார்க்கலாம்!

என்னை அவரது வீட்டுக்கு அழைப்பார். போனால், "நாகேஷ் வா... சாமி கும்பிட்டியா? என் முருகனைக் கும்பிடு! திருநீறு வெச்சிக்கோ! என்னிக்கும் நல்லா இருப்பே!" என்று சொல்லி, தனது பூஜை அறைக்கு அழைத்துப் போவார்.

ஒரு நாள் அவரது வீட்டுக்குப் போயிருந்தபோது, ஓர் அறைக்குள் அழைத்துக் கொண்டு போனார். அறையில் ஒரு பக்கம் முழுச் சுவரையும் அடைத்தாற் போல கதவு



"தேர்தலில் நிற்கும் இளம் கதாநாயகன் ஒரு பெண்ணைக் காதலிப்பதாகக் கதை! ஒரு நல்ல பெயர் சொல்லேன்!"

"காதல் ஒளிர்கிறது."

- தாம்பரம் பி.ஆர்.கண்ணன்

போடப்பட்ட ஒரு கப்போர்டு. "உள்ளே என்ன இருக்கு தெரியுமா?" என்று கேட்டார்.

"தெரியலையே!" என்று நான் சொன்னாலும் கூட, உள்ளே விலையுயர்ந்த தங்கம், வெள்ளி என்று ஏதாவது இருக்கும். இல்லையெனில் கட்டுக் கட்டாக ரூபாய் நோட்டு இருக்குமோ என்று நினைத்தேன்.

சாவியைப் பொருத்தி, கதவைத் திறந்தார். எனக்கு ஒரே ஷாக்! உள்ளுக்குள், நீளமான கொடி கட்டினாற் போல கம்பி பொருத்தப்பட்டிருந்தது. அதில் சாரிசாரியாக அகலம் குறைவான, நீளமான துணிகள் தொங்கவிடப்பட்டிருந்தன.

'இவையெல்லாம் பழனி முருகனின் கோவணத்துணிகள்தான்' என்றார்.

ஒவ்வொரு சனிக்கிழமையும் அபிஷேகம் முடிந்தவுடன், பழனி ஆண்டவருடைய கோவணத்துணி இவருக்கு வந்துவிடும். நவபாஷாணத்தில் செய்யப்பட்ட பழனி ஆண்டவருக்குக் கட்டப்பட்ட கோவணத் துணி, மிகவும் சக்தி வாய்ந்தது என்று நம்பிய அவர், அந்தத் துணியை தண்ணீரில் கசக்கிப்பிழிந்து, அந்தத் தண்ணீரைக் குடித்து விடுவார்.

தொடர்ந்து, காதுகளை கைவிரல்களால் பிடித்துக் கொண்டு 'முருகா! முருகா!' என்று உதடு துடிக்க உச்சரித்தபடியே, தோப்புக் கரணம் போடுவார், அப்போது பக்திப் பெருக்கெடுத்து, அவரது கண்களிலிருந்து தாரை தாரையாக (ஆனந்தக்) கண்ணீராகக் கொட்டும்.

(சிரிப்பு தொடரும்)

# கடிதம்

**வ**டக்குத் தெருவில் தேனம்மாப் பாட்டி, வள்ளிமயில் அத்தை. சிவகுரு மாமா, கீழத் தெருவில் செங்கோட்டை ஆச்சி... பொன்னையாத் தாத்தா, துரைராசு மாமா... இவர்களுக்கெல்லாம் நான் கடிதம் எழுதித் தரும் கௌரவ ஊழியன்.

"பேனாப் பேரன் எங்கே காணும்?" என்று என் பெயரைச் சொல்லாமல், என்னைத் தேடிப் பிடித்து 'எங்கடா போயிருந்த?' என்று செல்லமாய்க் கோபித்து... வீட்டுக்குக் கூட்டிச் செல்வார்கள்.

வெளியூர்களில்... வெளி மாநிலங்களில் வாழும் தங்கள் பிள்ளைகளிடம் பேச நினைப்பதை. பிரிய உணர்ச்சியை. மனசில் பூட்டி வைத்திருக்கும் நினைவுக் குவியலை... இலக்கண ஆடை எதுவுமின்றி... பாமர மொழியில் கொட்டிக் குவிப்பார்கள்.

நானும் அவர்களின் மொழியிலேயே அஞ்சலில் பதிவு செய்வேன். அந்தக் கரிசல் வார்த்தைகளைத் திருத்துவதும்... மாற்றுவதுமாய் இருந்தால் அவர்களின் உணர்வுகளின் வாசம் குறைந்து விடலாம் என்ற எச்சரிக்கை உணர்வோடு, அப்படியே எழுதி வாசிப்பேன். கேட்டுக் கேட்டு மகிழ்ந்தும் நெகிழ்ந்தும் எனக்கு முத்தமிடுவார்கள்.

"என் மகராசன்... சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளை மாதிரி... அப்படியே எழுதிருக்கியே... உன் படிப்பை வைச்சு நல்ல சொல் எழுதலாமில்ல?"

கேட்கவும் செய்வார்கள்.

"வேண்டாம் அம்மாயீ... நீ சொன்னதை அப்படியே எழுதி அனுப்புனாதான், உன் மகனுக்கு நீ பக்கத்துல இருந்து பேசின மாதிரி இருக்கும். புரியுதா?"

எஸ்எஸ்எல்சி மட்டுமே முடித்த எனது கல்வியையும் கௌரவித்து. ஆசிர்வதித்து. வாழ்த்தி, வணங்கி, தங்களின் பிரிய வெளிப்பாடாக காரச்சேவு, சீனிக்கிழங்கு, அவிச்ச மொச்சை... என்று தட்டு நிறையத் தருவார்கள். சாப்பிடச் சொல்லி அன்பு இம்சைதான்.



**அ**து ஒரு பொற்காலம். போய்விட்டது. இப்போது என் ஊரில் டெலிஃபோன் பூத் வந்துவிட்டது. சிங்கப்பூர் பாண்டி மகன் செந்தாமரை, சொந்தமாய் வைத்திருக்கிறான்.

அஞ்சல் எழுதி அனுப்பிய காலத்தில் அனுபவித்திராத சுகம், இப்போது நொடியில் தமது மகனோ, மகளோ, பேரனிடமோ பேசி விட முடிகிற சுகம்... அந்த நிமிஷமே தன் சொந்தங்களிடம் சேர்ந்தது போன்ற மகிழ்ச்சி... மனநிறைவு...

"ஃபோன் பேரன் இருக்கையில இனி எங்களுக்கு என்ன குறை? எங்க இருந்தாலும் பேச வச்சருவான் மகராசன்..."

அலெக்ஸாண்டர் கிரஹாம் பெல்லுக்கு கிடைக்க வேண்டிய மரியாதையை எல்லாம் அநியாயமாய்ச் செந்தாமரை வசூலித்துக் கொண்டிருந்தான்.

செந்தாமரையின்

கையில் காசு கொடுத்து, அவன் முகத்தையும் தடவித் தடவி வாழ்த்திய பெரிசுகள், ஒரு காலத்தில் கடிதம் எழுதித் தந்த என்னை மறந்து விட்டன. எனது சேவை தேவையில்லாமல் போனது.

"இந்தப் படிப்புக்கு உனக்கென்ன கலெக்டர் உத்யோகமா கெடைக்கும்? பியூன் வேலை கிடைக்கிறதே பெரிய விஷயம்... அதுக்குமே பி.ஏ., எம்.ஏன்னு எத்தனையோ அலையுதுக... உன் படிப்புக்குப் பேசாம, ஒரு கூடை, மண்வெட்டியத் தூக்குறது தான் அலப்பறையில்ல... அப்புறம் உன் பிரியம்..."



ஜே.குருநாதன்

எனது எஸ்எஸ்எல்சிக்கு இந்த மரியாதைதான் ஊரில் கிடைத்தது. இருந்தாலும் அந்தப் பலமில்லாத நோஞ்சான் படிப்பு, கடிதம் எழுதித் தருவதிலும்... வந்த கடிதத்தை வாசிப்பதிலுமாய் எனக்கொரு பெருமிதத்தைத் தந்தன.

அந்தப் பெருமையையும், பெருமிதத்தையும்கூட, பாழாய்ப் போன டெலிஃபோன் பூத் வந்து தட்டிப் பறித்து விட்டது.

இப்போதெல்லாம் என் மீதே எனக்கொரு வெறுப்பும் விரக்தியும்தான் எப்பொழுதும் இருந்தது.வாழ்க்கை வலிக்க வலிக்க நாட்கள் நகர்ந்தன.

தேனம்மாப்பாட்டி திடீரென்று இறந்து போனாள். டில்லியிலிருந்து அவள் மகன் வந்திருந்தார்.

பாட்டி இறந்த வீட்டுக்கு நானும் போய் இருந்தேன். என்னோடு அவர் சரியாய்ப் பேசவில்லை. நானும் அதைப் பெரிசாய் எண்ணிக் கொள்ளவில்லை. பத்துப் பதினாறு நாட்கள் இருந்து, விசேஷம் முடித்துக் கொண்டு அவர் டில்லிக்குப் புறப்பட்டபோது யார் யாரிடமோ பேசிக் கொண்டிருந்தார். குறிப்பாக, டெலிஃபோன் செந்தாமரையிடம் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்.

நானும் அவரைக் கண்டு கொள்ளாமல் பேப்பரில் மூழ்கியிருந்தேன். கடைசியில் என் தோளில் கை விழுந்ததும் நிமிர்ந்து பார்த்தேன். அவர்தான். என்னைக் கும்பிட்டார்...

"ரொம்ப நன்றி மாப்ள... உங்க கடிதங்கள் ஒவ்வொண்ணும் பிரமாதம். பிரேம் போட்டு மாட்டி வச்சிருக்கேன். இனி அம்மாவைத் தேடும்போதெல்லாம், அந்தக் கடிதம் ஒவ்வொண்ணையும் வாசிப்பேன். ஒவ்வொரு கடிதமும் எங்க அம்மா என்னோட பேசுற மாதிரியே இருக்கும். கடிதம் எழுதுன உங்க விரலுக்கு ஒரு மோதிரம் வாங்கிட்டு வாரேன் மாப்ள, அடுத்த தடவை. எழுதுங்க... எழுதிக் கொடுங்க. அது நல்ல பணி. டெலிஃபோன் பேச்செல்லாம் அந்த நேரம்தானே? அப்புறம் என்ன இருக்கும்? ஆனா கடிதம்... கடைசி வரைக்கும் ஞாபகமா வச்சிருக்கலாம். நான் வச்சிருப்பேன். கடிதங்களை மட்டுமில்ல, உங்களையும்தான் என் மனசில வச்சிருப்பேன். வரட்டுமா?"

கண்ணீர் திரையிட அவர் எனக்கு முத்தமிட்டுக் கைகுலுக்கி விடை பெற்றுக் கொண்டதை, டெலிஃபோன் பூத் செந்தாமரை பொறாமையுடன் பார்த்துக் கொண்டிருந்தான். ○

இப்போதே சூடு பிடிக்க ஆரம்பித்து விட்டது தேர்தல் பிரசாரம்! கட்சிக்குக் கட்சி பிரசாரக் கச்சேரியாக, யாரும் பாடாத பாட்டு களைப் பாடி நம்மைப் படாதபாடு படுத்தப் போகிறார்கள். அந்தப் பாடல்கள் அடங்கிய 'ஸ்பெஷல் புருடா' ஆல்பம் உங்களுக்காக!

ம.தி.மு.க: (படையப்பா. சிங்கம் ஒன்று புறப்பட்டதே.)

*புலி ஒன்று புறப்பட்டதே*
*வேலூர் விடை கொடுக்க*
*அண்ணன் படையெடுக்க*
*'பொடா' தடை உடைக்க*
*தேர்தல் கடை விரிக்க*
*புலி ஒன்று புறப்பட்டதே...*
*எனக்காக வோட்டுப் போட*
*ஏகப்பட்ட கூட்டமுண்டு*
*நாலு சீட்டை ஜெயிக்கும் வரைக்கும் - ஆட*
*பம்பரத்தில் பொறி பறக்கும் -*
*பிரசாரம் செய்ய... புலி ஒன்று*
*புறப்பட்டதே!*

அ.தி.மு.க (திருமலை - வாடியம்மா ஜக்கம்மா)

*ஏ... வந்தாரம்மா ஜெ*
*அம்மா*
*வணக்கம் போடு*
*வேகமா*
*அன்பு, பாசம்,*
*கருணை, நேசம்*
*எல்லாம் கொண்ட*
*தாயம்மா!*
*தி.மு.க டம்பிதான்*
*காங்கிரஸ் ஆயுள்*
*கம்மிதான்*
*ஸ்டேட் முதல் சென்ட்ரல் வரை*
*எல்லாம் எங்க மம்மிதான்!*

காங்கிரஸ்: (பு.கோ. சரவணன் - நாட்டுச்சரக்கு)

*நாட்டு நடப்பு நல்லவா*
*இருக்கு?*
*மதச்சண்டை ஊழல்னு*
*இருண்டுத்தான் கெடக்கு!*
*காங்கிரஸ் இருக்கே*
*நம்பிக்'கை' இருக்கே*
*சோனியாவின்*
*சேனைக்கெல்லாம்*
*சேவைதான் இலக்கே!*
*என்ன ஆட்சி இது? - மாமு*
*நெஞ்சம்*
*வலிக்கின்றதே*
*அன்னை ஆட்சி*
*வந்தா - மீண்டும்*
*தர்மம் ஜெயித்திடுமே!*

கிருஷ்ணசாமி - திருமாவளவன்: (விருமாண்டி - உன்னைவிட)

*திரு: உன்னைவிட - என்னைக்*
*கூட்டணியில்*
*சேர்த்துக்கிட யாருமில்லை. எவருமில்ல!*
*கிருஷ்: உன்னைவிட என்னைச் சரிவர*
*புரிஞ்சிக்க*
*யாருமில்லை - எவருமில்லை.*
*திருமா: வாக்குக் கேட்டு நாங்க*
*வந்திருக்கோம்!*
*தேர்தல் வரை ஒண்ணா*
*இணைஞ்சிருப்போம்!*
*கிருஷ்: சாதி சனம் வோட்டு அதை நம்பி*
*களத்தில் நிற்போம் வாடா - என் தம்பி!*

பி.ஜே.பி (ஸ்டூடண்ட் நம்பர் 1 - விழாமலே இருக்க முடியுமா.)

*அத்வானி: விழாமலே இருக்க முடியுமா?*
*விழுந்து விட்டோம் அம்மா வலையிலே*
*வராமலே போக முடியுமா?*
*வந்துவிட்டோம் 'போயஸ்' வழியிலே!*
*வாஜ்பாய்: நிஜம் நிஜம்தான்*

# ஞாபகம் வருதே..



கொடுத்த ஏழு சீட்டும்
ஏழு ஸ்வரங்கள்தான்...

தி.மு.க: (காக்க காக்க... உயிரின் உயிரே)
உயிரின் உயிரே, உடன்பிறப்பே
கழக விளக்கே... உன்னை
அழைக்கின்றேன்!
சோனியாவின் ஆட்சி அமைய
இதயம் திறந்து வோட்டு கேட்கிறேன்
அரசு ஊழியர் நிலையைப்
பார்த்தழுதேன்!
அரசு உயர்த்திய விலையைப்
பார்த்தழுதேன்!
அருமை தம்பியே! போதும் போதும்
கண்ணீர்!

பா.ம.க : (ஏழையின் சிரிப்பில் - எப்பா எப்பா ஜயப்பா)
எப்பா... எப்பா... 'அய்யா'ப்பா!
தமிழினத்தின் தலைவர்ப்பா!
கலை உலகை திருத்தத்தான்
அவதரித்த தெய்வம்ப்பா!
உன் பலம் - பலம்
மாம்பழம் - பழம்
மாம்பழம் நம்பலம்
சிதம்பரம் - அரக்கோணம்
திண்டிவனம் - தர்மபுரி, செங்கல்பட்டு,
புதுச்சேரி

(எல்லாப் பாட்டுகளையும் கேட்டுக் கேட்டு, காது வலி பொறுக்காமல் பொது ஜனம் பாடும் பாடல்)
(ஆட்டோகிராஃப்- ஞாபகம் வருதே)
ஞாபகம் வருதே - ஞாபகம் வருதே -
ஞாபகம் வருதே

எத்தனை தேர்தல்
எத்தனைக் கட்சிகள்
எத்தனை அல்வாக்கள் - ஞாபகம் வருதே!
ஓட்டைப் பையிலும் நிறைந்திடும் துட்டு!
இந்தியா ஒளிர்வதாய் ஒலிக்கட்டும்
பாட்டு!
காதுகள் மணந்திடும் வாக்குறுதி
கேட்டு
எலெக்ஷன் முடிஞ்சா
எல்லாமே ஜூட்டு!

- முகில்

# ஞாபகம் வருதே...



# ஏட்டிக்குப் போட்டி



• மாசிலாமணி



• ஆர். ராஜதாஸ்

நாகர்கோவில் நகரின் மையத்தில் இருக்கிறது ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரி. நூற்றாண்டைக் கடந்து நடைபோட்டு வரும் இந்தப் பாரம்பரியக் கல்விக் கூடத்தில், களை கட்டியது கல்கி நடத்திய கல்லூரிப் பட்டிமன்றம். கல்லூரியின் முதல்வர் முனைவர் எ.ஜேம்ஸ் ரெனால்டு டேனியல் தலைமை வகிக்க, கல்லூரியின் தாளாளர் ஆர். ராஜதாஸ், கல்கி ஆசிரியர் சீதாரவி ஆகியோர் முன்னிலையில், தன்னம்பிக்கைத் திலகம், சொல்வல்லர் மாசிலாமணி, நடுவர் பொறுப்பேற்க, 'இன்றைய இளைஞர்களை நேற்றைய இளைஞர்கள் ஊக்குவிக்கிறார்களா? உருக்குலைக்கிறார்களா?' என்ற தலைப்பில் ஏட்டிக்குப் போட்டியாக வெளுத்து வாங்கினார்கள் ஆறு மாணவ, மாணவிகள். பளிச் பளிச்சென்று மின்னலும் இடியுமாய்த் தாக்கிய பட்டிமன்றத்திலிருந்து சில தெறிப்புக்கள், உங்களுக்காக.

## ஊக்குவிக்கிறார்கள்!

டி. கிறிஸ்டோபர்:

இளங்கலை தமிழ் மாணவர்

• நேற்றைய வரலாறுதான் இன்றைய



# ஒரு சச்சின், நூறு சேவாக்!





சமுதாயத்தை உருவாக்குகிறது. மாவீரர்களாகவும், தியாக சிலர்களாகவும் வாழ்ந்து, வரலாறு படைத்த நேற்றைய இளைஞர்களின் வரலாறுகளைப் படிக்கிறபோது, இன்றைய இளைஞர்கள் வீறு கொண்டு எழுகிறார்கள். அப்துல் கலாமின் அக்னிச் சிறகுகளைப் பாதை மாறிய இளைஞன் படித்தால், அவன் புதிய பாதையில் புறப்படுவான். இன்று அக்னிச் சிறகுகள் என்றால், நேற்று எத்தனை வெற்றிகரமான வாழ்க்கை வரலாறுகளை விட்டுச் சென்ற சாதனையாளர்கள் வழிகாட்டிக் கொண்டிருக்கிறார்கள்!

● சிறுவயதில் நாம் தத்தித்தத்தி நடக்கும் போது நமக்கு நடை பயிலக்

## உருக்குலைக்கிறார்கள்

ஆர். சக்திபிரசாத்:
வணிகவியல் முதுகலை மாணவர்

● என்ன வழக்கு? யார் மீது குற்றம் சாட்டப்படுகிறது என்பதைக் கூட ஆராயாமல், இந்தியக் குடியரசுத் தலைவரையும், உச்சநீதி மன்ற நீதிபதியையும் கைது செய்ய, கண்ணை மூடிக் கொண்டு வாரண்டு பிறப்பிக்கிற நீதிபதிகள் நிறைந்த நாட்டில், லஞ்சப் பணத்தின் மேல் படுத்துத் தூங்கி கண் விழிக்கிற நேற்றைய தலைமுறையா இன்றைய தலைமுறையை ஊக்குவிக்கிறது?

● தினசரிகளைத் திறந்தால், தொலைக் காட்சிப் பெட்டியின் விசையை அழுத்தினால், வரதட்சணை சாவுகள், வழக்குகள்







● வாதிட்ட மாணவ, மாணவியர்.

கற்றுக் கொடுப்பதில் தொடங்கி, நமக்கு விருப்பம், ஆர்வம் எதில் அதிகம் என்பதை உணர்ந்து, கல்லூரியில் சேர்த்து, படிக்க வைத்து, வேலை தேடக் கற்றுக் கொடுத்து, வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் அவர்கள் காட்டுகிற வழிதானே இன்று நம்மை இந்த மேடைவரை கொண்டு வந்து சேர்த்திருக்கிறது? இப்படியிருக்க, நேற்றைய இளைஞர்கள் நம்மை உருக்குலைக்கிறார்கள் என்று எப்படி துடுக்குத்தனமாய்ச் சொல்ல முடியும்?

கண்ணில் படாமல் இருக்கிறதா? வரதட்சணை வாங்க மாட்டேன் என்று லட்சியம் பேசுகிற இன்றைய இளைஞனைப் பார்த்து, "பிழைக்கத் தெரியாதவன்" என்று தூண்டி விடுகிற பிற்போக்கான வழியைத் தானே நேற்றைய தலைமுறை காட்டுகிறது!

• அரசியல் ஓர் உயர்ந்த பீடம்! குடிமக்களின் அடிப்படைத் தேவைகளைத் தீர்த்து, ஒரு நாட்டை உலக அரங்கில் பொருளாதார ரீதியாக உயர்த்தி, மனித நேயமுள்ள

சமுதாயத்தை உயர்த்துகிற மகத்தான பணியினை அது ஆற்ற வேண்டும். ஆனால் இன்று என்னவானது? அரசியல், மதம், ஜாதி, குழுவாதம் என்று புகுந்து, அதன் புனிதத்தைக் குழி தோண்டிப் புதைத்தது நேற்றைய இளைஞர்கள் இல்லையா?

## ஊக்குவிக்கிறார்கள்!

மேரிசெல்வ சர்மி :

இளங்கலை ஆங்கில இலக்கியம்

● அரசியல், சாக்கடை ஆகிவிடக் கூடாது என்பதற்காகத்தான் அமரர் ராஜீவ் காந்தி, வோட்டுரிமையை இருபத்தோரு வயதிலிருந்து பதினெட்டு வயதாகக் குறைத்தார். ஆனால் இன்றைய இளைஞர்களில் எத்தனை பேர் வாக்குச்சாவடிக்குச் சென்று தங்கள் ஜனநாயகக் கடமையைச் செய்கிறார்கள்? படித்த இன்றைய இளைஞர்கள் வோட்டுப் போட்டால்தானே ஆட்சிகள் மாறும்!

● இன்று இளைஞர்கள் சாதிக்காத துறையென்று என்ன உண்டு? பெற்றோர்களின் உதவியோடு, ஆசிரியர்கள் போட்டுத் தந்த அஸ்திவாரத்தைக் கொண்டுதானே எழுந்து நிற்கிறார்கள்? இன்றைய இளைஞர் சக்தியின் சீக்ரெட், நேற்றைய ஆசிரியர் சக்தி கொடுத்த பூஸ்ட்தானே? இதைப் புரிந்தும் புரியாதது போல் நடிக்கலாமா, நடிப்புத் திலகங்களே?

## உருக்குலைக்கிறார்கள்!

டி. ஜெபநேசகுமார்:

இளங்கலை ஆங்கிலம்!

● பெற்றோர் புராணமும், ஆசிரியர் விருத்தமும் பாடிய அன்புச் சகோதரியே! நேற்றைய இளைஞர்களான இன்றைய பெற்றோர்கள் என்ன செய்கிறார்கள்? பிள்ளைகளோடு சேர்ந்து 'தண்ணி'யடிக்கிறார்கள். சிகரெட் வாங்கிவரப் பணிக்கிறார்கள். பெண் பிறந்தால் கள்ளிப்பால் ஊற்றி நிரந்தரமாய்த் தூங்க வைத்து விடுகிறார்கள். இவர்களா பெற்றோர்கள்? தன் மகன் பீர் குடிக்கிறான் என்பதற்காக பெருமைப்படுகிற பெற்றோர்களை உங்களுக்குக் காட்டட்டுமா?

● தேசிய கீதம் போல தனியார் டீ.விக்கள் மன்மதராசா பாடலை ஒளிபரப்புகின்றன. தணிக்கைக் குழுவால் வெட்டப்பட்ட வார்த்தைகளும், காட்சிகளும், பாடல்களும் அப்படியே சின்னத்திரையில் சென்ஸார் இல்லாமல் வருகின்றன. இதைப் பற்றி நேற்றைய இளைஞர்கள் சிந்தித்தார்களா? இன்றைய இளைஞர்களை இந்த மாதிரிப் பாடல்களும் காட்சிகளும், தவறான பாதையில் அழைத்துச் செல்லும் என்பதை அறிந்தும் அனுமதிக்கிறார்கள். இதைத்தான் கேட்கிறார்கள் என்று பழியைத் தூக்கி நம் மேல் போடுகிறார்கள். எங்களை வழி நடத்துவதை விட்டுவிட்டு, அழிந்துபோகச் சொல்கிறீர்கள்... இதுதான் நீங்கள் தருகிற ஊக்கமா?

## ஊக்குவிக்கிறார்கள்!

ஜி.செல்வகுமார்: இளங்கலை தமிழ்

● மன்மத ராசா பற்றி கவலைப்படுகிற மாண்புமிகு மாணவனே! 'சிங்க நடை போட்டு சிகரத்தில் ஏறு..' என்ற தங்கமான தன்னம்பிக்கைப் பாடல் உன் காதில் விழவில்லையா? 'நல்லபேரை வாங்கவேண்டும் பிள்ளைகளே' என்ற கண்ணதாசனின் காவிய வரிகளுக்கு, நீங்கள் காது கொடுக்கவில்லையா? 'தூங்காதே தம்பி தூங்காதே' என்றுதான் உன்னைப் பார்த்துச் சொல்ல வேண்டியிருக்கிறது.

● 'கமான் இந்தியா' என்பதுதான் இன்றைய தேசிய கீதம்! கிரிக்கெட் துறையில் இந்தியா இன்று உலக அரங்கில் தலை நிமிர்ந்து நிற்கிறது என்றால், யார் காரணம்! இன்று சேவாக்கிற்கு வழிகாட்டிய சச்சின் தானே! இங்கே ஒரு சச்சின் இருந்தால் போதும், ஆயிரம் சேவாக்குகள் அணிவகுத்துக் கிளம்புவோம்!

● விளையாட்டு மட்டும்தான் என்றில்லை, நேற்று இலக்கியத்தில் வள்ளுவர்

---

''ஓவரா ஹீட் ஆகிக்கிட்டிருந்த என்னோட கம்ஃப்யூட்டரை சரி பண்ணிட்டியே! அப்படி என்ன செஞ்சே?''

''நீங்க 'சேவ்' பண்ணியிருந்த உங்க பொண்டாட்டியோட ஃபோட்டோவை டெலிட் பண்ணிட்டேன்.''

- ஓ.பி.ஆர்

கம்பன், பாரதி என்று நேற்றைய இளைஞர்கள் போட்ட பாதையில்தான், இன்று வீட்டுக்கொரு கவிஞன்.

## உருக்குலைக்கிறார்கள்

*சகாயசோனி: இளங்கலை தமிழ்*

● இங்கே கவிஞர்களைப் பற்றி இலக்கியம் பற்றி பேசுகிறார்கள். ஆனால் இலக்கிய உலகிலே சகிப்புத்தன்மை இல்லை. தனி நபர் தாக்குதலில், இன்றைய தமிழ் இலக்கியம் ஆந்திர எல்லையில் கூட அறியப்படாமல் அழிந்து போகிறது. விருதுக்குச் சண்டை போடுவதுதான் இலக்கியப் பணி என்று, இன்றைய வளரும் தலைமுறைக்குக் கற்றுத்தருகிறார்கள். கலைமாமணி விருது காபிக் கடையில் கிடைக்கிறது. சூப்பர்



கவிஞர், சுப்ரீம் கவிஞர் என்று கேடு கெட்ட சினிமா ஹீரோக்களைப் போல, பட்டங்களுக்காக அடித்துக் கொள்கிறார்கள் உங்கள் கவிஞர்கள்.

● இந்தக் கொடுமை போதாதென்று இன்றைய இளைஞர்கள், தங்கள் அபிமான ஹீரோவுக்கு அறுபதடி கட் அவுட் வைத்து பாலாபிஷேகம் செய்வதை, பத்திரிகைகளில் படம் பிடித்துப் போட்டுப் பரபரப்பாக விற்பனை நடக்கிறது. இதுவா இன்றைய இளைஞர்கள் விரும்புவது?

## தீர்ப்பு

*சொல்வல்லவர் மாசிலாமணி எம்.ஏ.*

● ஆயுதம் ஏந்தி அடித்துக் கொள்ளாமல் சொல்லை வில்லாக்கி, உணர்ந்த உண்மைகளை அம்பாக்கி, தங்கள் வாதங்களைத் தாக்குதல்களாக இந்த நீதிமன்றத்தில் தாக்கல் செய்திருக்கிறார்கள். நேற்றைய இளைஞர் இயேசு, அன்புக்கு இலக்கணமாக வாழ்ந்தார். அண்ணல் காந்தி அஹிம்சையின் உருவமாக உலாவந்தார். சாக்ரட்டீஸ் அறிவின் வடிவமென்றால், அன்னை தெரசாவோ, சேவையின் சிகரம். விவேகானந்தரோ விழிப்புணர்வு தந்தார். அம்பேத்கர், கற்றுக் கொண்டு போராட அறை கூவல் விடுத்தார் என்றால், அப்துல்கலாம் கனவு காண, திட்டமிட, செய்து முடிக்க, கற்றுக் கொடுக்கிறார். இப்படி இன்றைய இளைஞர்களை ஊக்குவிக்கிற நேற்றைய இளைஞர்களின் பட்டியல் நீளம்.

அதே நேரம் உருக்குலைக்கிறவர்களும் இருக்கிறார்கள் என்பதை வேதனையுடன் சுட்டிக் காட்டாமல் இருக்க முடியவில்லை. நேற்றைய இளைஞர்களான இன்றைய பெற்றோர்கள், ஆசிரியர்கள், தலைவர்கள், அதிகாரிகளில் பலர், இன்றைய இளைஞர்களுக்குத் தங்கள் தவறான வாழ்க்கையின் மூலம், தவறான பாதையை நியாயப்படுத்திக் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஆப்கானிஸ்தானிலே பால்மணம் மாறாத சிறுவர்கள் கையில் துப்பாக்கியைக் கொடுத்து, பயிற்சியும் அளிக்கிறார்கள் அங்குள்ள அடிப்படைவாதிகள்.

ஹிட்லரில் தொடங்கி, இன்றைக்கு பின்லேடன் வரையிலும், மனித சமுதாயத்துக்கு இனத்தின் பெயரால், மதத்தின் பெயரால் சவக்குழி தோண்டுகிறவர்களின் பட்டியலும் பெரியது.

இங்கே சினிமா பற்றியும், பாடல்கள் பற்றியும் பேச்சு வந்தது! பணத்திற்காக மட்டுமே 'கல்யாணம்தான் கட்டிக்கிட்டு ஓடிப் போலாமா?' என்று எழுதி, இந்தச் சமுதாயத்தின் நாளையத் தூண்களான இளைஞர்களின் மூளையில் ஒட்டடை படிய வைக்கிற உன்னதப் பணியை சினிமா ஊடகத்தில் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆக, நேற்றைய இளைஞர்கள் இன்றைய இளைஞர்களை உருக்குலைக்கவும் செய்கிறார்கள். ஆனால் பெரும்பாலான நேற்றைய இளைஞர்கள் வாழ்ந்து காட்டிய வாழ்க்கையும், தொடர்ந்து வாழ்ந்து காட்டுவதும்தான் சமுதாயத்தின் அடிப்படை அஸ்திவாரமாகத் தொடர்கிறது. அந்த வகையில் ஊக்குவிக்கிறவர்தான் அதிகம் என்று தீர்ப்பளிக்கிறேன்.

தொகுப்பு: **ஜெய்**

# கோடி கோடி மின்னல்கள்

அவரோட கண்களில் என்னை விரும்பற ஒரு ரசாயனக் கலவை தெரிஞ்சுது. கூடிய சீக்கிரமே என் கிட்டே வந்து 'ஐ லவ் யூ' சொல்வார்ன்னு நினைச்சேன். ஆனா அந்தக் கட்டத்தையும் தாண்டி, அவர் கல்யாணத்துல வந்து நிப்பார்ன்னு நான் நினைக்கலை. நான் அவ்வளவு உறுதியாப் பேசறதுக்கு இன்னொரு காரணமும் இருக்கு டாக்டர். நான் இந்தக் கல்யாண விஷயத்துல என்ன பதிலைச் சொல்லப் போறேன்னு தெரிஞ்சுக்கிறதுக்காக, உங்க சன் மிஸ்டர் ஆதித்யா இதே அறையில் அந்தப் பெரிய ஷெல்ஃப்புக்குப் பின்னாடி மறைஞ்சு நின்னுட்டிருக்கிறது இந்த பீரோ நிலைக் கண்ணாடியில் நல்லாவே தெரியுது... டாக்டர்..."

"கிரேட்!" என்றபடி கர்ச்சிப்பால் முகத்தை ஒற்றியபடி வெளியே வந்தான் ஆதித்யா. நாற்காலிக்குப் போய் சாய்ந்தபடியே சொன்னான்.

"அப்பா...! திஸ் ஈஸ் வைகை..."

சர்வேஸ்வரன் மையமாய் தலையை ஆட்டிவிட்டு வைகையை ஏறிட்டார்.

"சரி... உன்னோட பதில் என்னம்மா...?"

"எதுக்கு டாக்டர்?"

"எனக்கு மருமகளா வர உனக்கு சம்மதமாம்மா? உன்னோட சம்மதத்தைத் தெரிஞ்சுகிட்ட பின்னாடிதான், உன் வீட்டுக்கு வந்து உன்னைப் பெத்தவங்ககிட்டே முறைப்படி பெண் கேட்கணும்..."

"ஸாரி டாக்டர்... என்னோட கல்யாணத்துக்கு இப்போ எந்த அவசரமும் இல்லை... மொதல்ல என்னோட ரெண்டு தங்கைகளுக்கு கல்யாணம் நடக்கணும். அதுக்கப்புறம்தான் எனனோட கல்யாணம்."

"என்னம்மா வைகை... வீட்டுக்கு மூத்தப் பெண் நீ. உனக்கு மொதல்ல கல்யாணம் நடக்கிறதுதானே

டாக்டர் சர்வேஸ்வரன் சுவாசிக்கச் சில விநாடிகள் திணறிவிட்டு, ஆயிரக் கணக்கான ஆச்சரியக் குறிகளை முகம் முழுக்க பரப்பி வைத்துக் கொண்டு வைகையை ஏறிட்டார்.

"என்னோட மகன் ஆதித்யா உன்னை கல்யாணம் பண்ணிக்க விரும்பற விஷயம் உனக்கு முன்னாடியே தெரியுமாம்மா?"

வைகை சின்னதாய் புன்னகை செய்தாள். "ஓரளவுக்கு 'கெஸ்' பண்ணியிருந்தேன் டாக்டர்."

"எ...எ...எப்படி...?"

வைகையின் புன்னகை பெரிதாயிற்று. "ஒரு பெண்ணையும் அவ மனசையும் புரிஞ்சுக்கிறதுக்கு பல வருஷங்கள் தேவைப்படும். ஆனால் ஒரு ஆணைப் புரிஞ்சுக்க ஒரே ஒரு நாள் போதும். இது வில்லியம் வேர்ட்ஸ்வொர்த் சொன்ன ஒரு பொன்மொழி. உங்க சன் என்னை ரெண்டாவது தடவை பார்க்கும்போதே,



முறை?"

"ஸாரி டாக்டர்..! எங்க வீட்ல அந்த 'முறை' கொஞ்சம் மாறுது. என்னோட ரெண்டாவது தங்கை யமுனாவுக்கு, கால் இலேசாய் ஊனம்ங்கிறதும், அடுத்த தங்கை துங்க பத்ராவுக்கு கழுத்துல அமிலம்பட்டு அந்தப் பகுதி கருகிப் போயிருக்கிறதும் உங்களுக்குத் தெரியும். அந்த ரெண்டு ஊனங்களுக்கும் கல்யாணச் சந்தையில் என்ன விலை நிர்ண யிக்கப்பட்டிருக்குன்னு எனக்குத் தெரியாது. அந்த விலையைக் கொடுத்து, அவங்களுக்குக் கல்யாணம் பண்ணி வைக்காமே, எனக்கு கல்யாணம் இல்லை."

சர்வேஸ்வரன் வைகையைக் கையமர்த்தி னார்.

"இதோ பாரம்மா..! உன்னோட சிஸ்டர்ஸ் ரெண்டு பேரோட கல்யாணத்தைப் பத்தின கவலை உனக்கு வேண்டாம். மொதல்ல உன்னோட கல்யாணம் நடக்கட்டும். அதுக்கப்புறம் அவங்களுக்கு ஏற்ற மாப்பிள் ளைகளை தேர்ந்தெடுத்து, கல்யாணத்தைப் பண்ணி வைப்போம்."

"ஸாரி டாக்டர்! இந்த வைகையோட கழுத்தில் தாலி ஏறிட்டா, அவளுக்கு அவளோட அப்பாவும், அம்மாவும், ரெண்டு தங்கைகளும், அந்நியமாயிடுவாங்க...! என்னால உரிமை எடுத்துக்கிட்டு எதுவும் பண்ண முடியாது. மொதல்ல யமுனாவுக்கும், துங்கபத்ராவுக்கும் கல்யாணம் நடக்கணும். அதுக்கப்புறம்தான் என்னோட கல்யாணத்தைப் பத்தி நினைச்சுப் பார்ப்பேன். நான் இப்படி ஒரு முடிவோடு இருக்கிறது, என் வீட்ல இருக்கிறவங்களுக்கே தெரியாது. என்னோட அப்பா கல்யாணத் தரகர்களை வீட்டுக்குக் கூட்டி வந்து, என்னோட கல்யாணப் பேச்சை எடுக்கும் போதெல்லாம் 'எனக்கு நல்ல படிச்ச மாப்பிள்ளைதான் வேணும்... பணக்கார மாப்பிள்ளைதான் வேணும்'னு சொல்லி, அந்தத் தரகர்களை மிரள வெச்சு வீட்டுப் பக்கமே வராதபடி பண்ணி வெச்சிருக்கேன்..."

சர்வேஸ்வரன் புன்னகை செய்தார். "நீ எந்த நேரத்துல அந்த வார்த்தைகளைச்

ராஜேஷ்குமார்



சொன்னியோ, அது உனக்கு இப்போ கைக்கு எட்டுகிற தூரத்தில் இருக்கு... வைகை..! என்னோட மகன் உன் மேல ஆசைப்பட் டான்கிற ஒரே ஒரு காரணத்துக்காகத்தான் உன்னைத்தேடி இவ்வளவு பெரிய அதிர்ஷ்டம் வந்திருக்கு..."

"ஸாரி! இதை என்னோட அதிர்ஷ்டமா நான் நினைக்கலை டாக்டர்... என்னோட குறிக்கோள்களுக்கு குறுக்கே வந்த ஒரு ஸ்பீட் பிரேக்கராத்தான் இதை நினைக்கிறேன்..."

ஆதித்யாவின் முகம் ஒரு கருங்கல்லைப் போல் இறுகிப் போக, சர்வேஸ் வரன் முகம் வெந்தார்.

"என்னம்மா சொன்னே... ஸ்பீட் பிரேக்கரா...? உன்னைத் தேடி வந்து இருக்கிற இந்த அதிர்ஷ்டம் எப்பேர்ப் பட்டதுன்னு உனக்குத் தெரியலை! நான் தரப் போகிற அட்சயப் பாத்திரத்தை வேண் டாம்னு சொல்லிட்டு,

பிச்சை எடுக்கத்தான் போவேன்னு நீ சொல்றது எனக்கு ஆச்சர்யமாயிருக்கும்மா."

வைகை ஏதோ பேச முற்பட, அதுவரைக்கும் ஒன்றும் பேசாமல் இருந்த ஆதித்யா குறுக்கிட்டான்.

"ஒரு நிமிஷம் மிஸ் வைகை...! அப்பா கொஞ்சம் ஹார்ஷா பேசிட்டார்ன்னு நினைக்கிறேன். அதிர்ஷ்டம், அட்சயப்பாத்திரம் போன்ற வார்த்தைகள் அவரோட ஆர்வ மிகுதியின் காரணமாய் வெளிப்பட்டது. அதை நீங்க பெரிசா எடுத்துக்க வேண்டாம். நீங்க என்னோட லைஃப் பார்ட்னராய் வரணும்ன்னு நான் விரும்பினேன். இதுல உங்களுக்கு விருப்பம் இல்லேன்னா, வேண்டாம். என்னைப் பொறுத்த வரைக்கும் இது ஒரு அப்ளிகேஷன்தான். இந்த அப்ளிகேஷனை ஏத்துக்கறதும் ஏத்துக்காததும், உங்க விருப்பம். வேணும்ன்னா யோசனை பண்ணி முடிவு சொல்ல, ரெண்டு நாள் அவகாசம் எடுத்துக்குங்க... ஒண்ணும் அவசரம் இல்லை..."

"நான் ஆல்ரெடி யோசனை பண்ணிட்டேன் ஸார்."

"உங்க முடிவு....?"

"எனக்கு அட்சயப் பாத்திரம் வேண்டாம் ஸார்" வைகை சொல்லிவிட்டு, விருட்டென்று எழுந்து அறைக்கதவைத் திறந்து கொண்டு வெளியேறினாள்.

''அரசியல்வாதி மகனைக் கல்யாணம் பண்ணினது தப்பாப் போச்சு.''
''ஏன், என்னாச்சு?''
''திடீர் திடீர்னு கால்ல விழுந்துடுறாரு!''
- புப. சந்திரன்



சர்வேஸ்வரன் இறுகிப்போன முகத்தோடு மகளைப் பார்த்தார்.

"என்ன ஒரு திமிர் பார்த்தியாடா...?"

"தட் ஈஸ் வைகை..."

"மேற்கொண்டு என்ன பண்ணலாம் சொல்லு..."

"உங்க இஷ்டப்படி ஒரு பெண்ணைப் பார்த்து முடிங்கப்பா."

"நீ ஒரு ப்ரய்ன் ஸ்கேன் எடுத்துப் பார்த்துடறது நல்லது... வைகை!"

"எதுக்கு...?"

"உனக்கு உண்மையிலேயே மூளை இருக்கா.. இல்லே அந்த இடத்துல மண் உருண்டை ஏதாவது இருக்கான்னு தெரிஞ்சுக்கத்தான்."

"எதுக்காக இந்தக் கோபம்... அர்ச்சனா?"

"இது கோபம் இல்லை... உலக மகா ஆத்திரம். கன்னத்துல நாலு அறை அறையலாமான்னு இருக்கு... மிஸஸ் ஆதித்யாவாய் மாறி, கலிபோர்னியாவுக்குப் பறக்கிற வாய்ப்பைக் கோட்டை விட்டுட்டு, இப்படி ஒரு ரூபாய் வேர்க்கடலைப் பொட்டலத்தோடு என் முன்னாடி வந்து சாவகாசமா உட்கார்ந்துட்டிருக்கியே... உன்னை என்ன பண்ணலாம் சொல்லு...?"

கடற்கரையில் கூட்டம் அவ்வளவாக இல்லாததால், அர்ச்சனா சத்தம் போட்டே வைகையைத் திட்டினாள். வைகை ஒரு வேர்க்கடலையை கவனமாய் உடைத்து, அதை கவனமாய் வாயில் போட்டுக் கொண்டே கோபத்தில் பொரியும் அர்ச்சனாவைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

"நான் செஞ்சது தப்புன்னு சொல்ல வர்றியா...?"

"சேச்சே...! அது தப்பு கிடையாது... வடிகட்டின முட்டாள்தனம். இன்னும் ஒரு படி மேலே போய் சொல்லணும்னா, அறிவு கெட்டத்தனம்."

"புலம்பாதே அர்ச்சனா!"

"முடியலையே...! நீ அப்படி பட்டவர்த்தனமா பேசிட்டு வந்ததுக்குப் பதிலா, யோசனை பண்ணிச் சொல்றேன்னு சொல்லிட்டு வந்திருக்கலாமே...?"

"அதுல யோசனை பண்ண என்ன இருக்கு?"

"வைகை... நீ ஒரு நல்ல வாய்ப்பை மிஸ் பண்ணிட்டே! நீ ஆதித்யாவைக் கல்யாணம் பண்ணியிருந்தா, உன்னோட ஸ்டேட்டஸ் 'க்ராஃபிக் சார்ட்'ல எவரெஸ்ட் உச்சிக்கே போயிருக்கும். அதுக்கப்புறம் உன்னோட சிஸ்டர்ஸ் ரெண்டு பேருக்கும் நல்ல ஃபேமிலியிலிருந்து வரன்கள் வந்திருப்பாங்க."

''நானும் அந்த பாயிண்ட்டை யோசிச்சேன் அர்ச்சனா. பட்.''

"என்ன பட்... சொல்லு..."

"நான் ஆதித்யாவை வேண்டாம்ன்னு சொன்னதுக்கு என்னோட சிஸ்டர்ஸ் மட்டும் காரணமில்லை."

"பின்னே...?"

"என்னோட காதலும்..."

அர்ச்சனாவின் விழிகள் 'ஃப்ரீஸ்' போட்ட மாதிரி உறைந்தன.

"எ...எ...என்ன சொன்னே... காதலா....!"

"ம்..."

அர்ச்சனா உதட்டைக் குவித்து விசில் அடித்தாள். பின் தலையைச் சாய்த்து கேட்டாள்.

"யார் அந்த பாக்கியவான்...?"

"இளஞ்செழியன்..."

"அந்த மெட்டியோசை பத்திரிக்கையின் க்ரைம் ரிப்போர்ட்டர் தானே...?"

"ஆமா..."

"நான் இதை எதிர்பார்க்கலை வைகை...! எந்த ஒரு ஆணும் உன்னோட மனசை சலனப்படுத்த முடியாதுன்னு நினைச்சேன்."

"எனக்கே இது ஆச்சர்யம்தான்... உடம்புக்குள்ளே ஹார்மோன்கள் பண்ற கலாட்டாவை, என்னாலே கட்டுக்குள் கொண்டு வர முடியலை... ஐ.... ஃபெய்ல்ட்.... அர்ச்சனா..."

"ஸாரி வைகை..! உன்னோட மனசுக்குள்ளே முளைவிட்டிருக்கிற காதலைப் புரிஞ்சுக்காமே, நான் பாட்டுக்கு உன்னை கன்னாபின்னான்னு திட்டிட்டேன். ஆனா இந்த ஆதித்யா என்ன... பில்கேட்ஸே உன்னை விரும்பினாலும் சரி, ஹவுஸ்ஃபுல் போர்டைக் காட்டிட வேண்டியதுதான்."

வைகை பெருமூச்சுவிட்டாள். "கடந்த பத்து நாட்களாய் சீஃப் டாக்டர் சர்வேஸ்வரன் என்கிட்டே சரியா முகம் கொடுத்துப் பேசறது இல்லை. பட் ஆதித்யா அப்படியில்லை. நான் அவரைக் கல்யாணம் பண்ணிக்க 'நோ'ன்னு சொன்னதைப் பொருட்படுத்தாமே, சகஜமாப் பேசறார். நான் கவனிக்கலைன்னாலும் கூப்பிட்டு குட்மார்னிங் சொல்றார். இந்த நிலைமையில் அந்த ஹாஸ்பிடலில் நான் வேலை பார்க்கிறதை கில்டியா ஃபீல் பண்றேன். வேற வேலை ஒண்ணைத் தேடிக்கிட்டு இதை விட்டுடலாம்னு பார்க்கிறேன். நீ என்ன சொல்றே அர்ச்சனா?"

''மகாமகத் துக்குப் போயிட்டு வந்த மறுநாளே எனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து நான் இன்னும் மீளலை...''

''ஏன், எதையாச்சும் அங்கே தொலைச்சுட்டியா?''

''இல்லே... கூட்டத்துல தொலைச்சுட்டு வந்த என் மாமியார், வீட்டுக்குத் திரும்பி வந்துட்டாங்க!''

- கிரிஜா மணாளன்



அர்ச்சனா வைகையின் தோளைத் தட்டினாள். "நோ...நோ.... இந்த வேலையை விட்டுட்டுப் போற எண்ணமே வேண்டாம். சீஃப் டாக்டர்க்கு உன்மேல் வருத்தம் இருக்கலாமே தவிர, கோபம் இருக்காது. நாளாக நாளாக அந்த வருத்தமும் போயிடும். என்னைக் கேட்டா, உன்னோட காதல் விவகாரத்தை எடுத்த எடுப்பிலேயே டாக்டர்கிட்டே சொல்லியிருக்கலாம்."

அர்ச்சனா சொல்லிக் கொண்டிருக்கும்போதே வைகையின் வானிடி பைக்குள் இருந்த செல்ஃபோன் குரல் கொடுத்தது.

வைகை புன்னகை செய்தாள்.

"இது இளஞ்செழியன்தான்."

"எப்படி சொல்றே...?"

''சரியா ஆறரை மணிக்கு போன் பண்றேன்னு சொல்லியிருந்தார். இப்போ மணி ஆறரை." வைகை சொல்லிக் கொண்டே வானிடி பேக்கிலிருந்து செலஃபோனை எடுத்து காதுக்கு ஒற்றினாள்.

"ஹலோ..."

மறுமுனையில் ஓர் ஆண்குரல் பதற்றமாய் ஒலித்தது.

"வைகைங்களா?"

"ஆமா..."

"நான் இளஞ்செழியனோட ஃப்ரண்ட் நவநீதகிருஷ்ணன் பேசறேன். நீங்க உடனே புறப்பட்டு வடபழனியில் இருக்கிற வாணி ஹாஸ்பிடலுக்கு வர முடியும்ங்களா?"

"என்ன விஷயம்?"

''இளஞ்செழியனுக்கு ஒரு சின்ன ஆக்ஸிடெண்ட்."

(தொடரும்)






AG
TM

# ஐயோ-டேட்டா!

இந்த வாரம் தி.மு.கவின் அதி தீவிர பக்தர் ஒருவரது ஐயோ (பாவம்) டேட்டா!

| | |
|---|---|
| பெயர் | ச. சாம்குமார் |
| படிப்பு | ஏழாவது |
| குடும்பம் | மனைவி, இரண்டு மகன்கள் (இருவருக்கும் நிரந்தர வேலை இல்லை) |
| எதில் ஈடுபாடு? | மூச்சோடு கலந்து விட்ட கழகத்தில்தான். (தி.மு.கவின் முதல் பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்ட பெருமை உண்டு.) |
| அரசியலில் இழந்தது? | எதைச் சொல்வது, எதை விடுவது? பார்க்க வெள்ளையும் சொள்ளையுமாக வேட்டி சட்டைதான். மற்றபடி வறுமைக் கோட்டுக்குக் கீழேதாங்க நம்ம நிலை. தெருவோர சைக்கிள் ரிப்பேர் ஷாப்தான் பிழைப்பு. |
| பெருமைப்படுவது | ஆளும்கட்சியாக தி.மு.க பலமுறை இருந்தபோதும்கூட, கட்டைப் பஞ்சாயத்து, கட்டிங் போன்ற எவற்றிலும் பெயர் அடிபடாமல் இருப்பது. அதனால்தான் 'பிழைக்கத் தெரியாத' வட்டச் செயலாளராக பல ஆண்டுகளாக இருக்கிறேன். |
| வருத்தப்படுவது | கட் அவுட், பேனர், போஸ்டர் என்று பணத்தால் அடித்து கட்சியில் பதவிகளைப் பிடிக்கும் திடீர் பிரமுகர்களை ஊக்குவிக்கும் போக்கும், தொண்டர்களின் தியாகம், தொண்டு ஆகியவற்றுக்கு முன்போல ஊக்கம் இல்லாததும். |
| சமீபத்திய வருத்தம் | பணப் பிரச்னையால் விருதுநகர் மாநாட்டுக்குப் போக முடியாதது. |
| மறக்க முடியாதது | பால் கமிஷன் அறிக்கையை கலைஞர் வெளியிட்டது தொடர்பாக அவரைக் கைது செய்தபோது, நடந்த போலீஸ் தடியடியில் போலீஸ் தாக்குதலிலிருந்து காப்பாற்றிய முரசொலி மாறனை. |
| இல்லாதது | சில வட்டச் செயலாளர்கள் போல் செல்ஃபோன், டாடா சுமோ, சொந்த வீடு, கிலோ கணக்கில் கழுத்தில் செயின், மோதிரம் |
| தேர்தல் வேலை | துவங்கி விட்டேன். கட்சியை எதிர்பார்க்காமல் இரண்டாயிரம் ரூபாய் வட்டிக்கு வாங்கி, சுவர் பிடித்து வெள்ளையடித்து, தயாநிதி மாறன் அவர்களுக்கு வோட்டு கேட்கத் துவங்கி விட்டேன். |
| வருமானம் எப்படி? | கைக்கும் வாய்க்கும் சரியாக இருக்கிறது. கட்சிப் பணிக்கு வாங்கிய கடனில் தடுமாறி நிற்கிறேன். |

படம்: ராஜன் - ப்ரியன்



## மேஷம்

வேட்பாளர் அறிவிக்கப்பட்ட தேர்தல் களம் போல பரபரப்பாக இருப்பீர்கள். உங்கள் ராசிநாதன், 11ம் தேதி முதல் ரிஷப ராசியில் சஞ்சாரம், சூரியன் 14ம் தேதி முதல் 12ல் சஞ்சாரம் என்பதால், தெய்வபலம் அதிகரிக்கும். உத்தியோகத்தில் இதுவரை இருந்த மன சஞ்சலம் விலகும். சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் உண்டாகும். கூட்டுத் தொழிலில் நல்ல லாபம் உண்டு. குடும்பத்தில் குதூகலமான திருப்பம் உண்டாகும். இப்பவே ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸுக்கு ஆர்டர் கொடுத்துடுங்க!

## ரிஷபம்

'நாளை நமதே; நாற்பதும் நமதே!'னு முழங்கிட்டிருக்காங்களே... அப்படியே மாத்துங்க! 'நாளை நமதே; நல்ல நாடும் நமதே!'னு இந்த வாரம் முழுக்க உற்சாகமாகப் பாடப் போறீங்க. குடும்பத்துல சுப மங்கள காரியங்கள் நடக்கும். 2வது சுற்று சனி நடைமுறையில் இருக்கிறவங்களுக்கு, புதுச் சொத்து, வீடு, ஆபரணச் சேர்க்கை உண்டாக வாய்ப்பிருக்கு. நல்ல பலனா நடந்துச்சன்னா, ஒரு 'தாங்க்ஸ் கார்டு' அனுப்பி வையுங்க.

## மிதுனம்

நிரம்பி வழியும் மகாமக ஸ்பெஷல் ரயில் போல, உங்க மனசும் தன்னம்பிக்கையாலே நிரம்பி வழியப் போகுது. உங்க கிரக சஞ்சாரம் அப்படி! உற்சாகமான மனநிலை, ஆரோக்கிய மேன்மை, எடுத்த காரியத்தில் வெற்றின்னு ஜொலிக்கப் போறீங்க. குறிப்பா, மாணவச் செல்வங்களுக்கு, மேல் படிப்புக்காக வெளிநாடு போற வாய்ப்புக் கிடைக்கும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம். மெகா சீரியல்களைத் தவறாமல் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்கும்.

## கடகம்

நோபல் பரிசுக்கு அமெரிக்க அதிபர் புஷ்ஷைப் பரிந்துரை செய்வதற்கு பதிலாக, உங்க பேரை சிபாரிசு செஞ்சிருக்கலாம். அவ்வளவு அமைதியா, அழகா, அசத்தலா காரியங்களைச் சாதிக்கப் போறீங்க. சுய தொழில் வியாபாரத்தில் முன்னேற்றம் ஏற்படும். பழைய கடன் தொல்லைகள் படிப்படியாகக் குறையும். நிர்வாகத் துறையில் உள்ளவங்க சுதந்திரமாகச் செயல்படுவீங்க. புனித ஸ்தல யாத்திரை போவதற்கும் வாய்ப்பிருக்கு. 'ராமா, கிருஷ்ணானு' கிளம்பிடுங்க!

## சிம்மம்

உங்க அலுவலகத்தைப் பொறுத்தவரை, நீங்கதான் சூப்பர் ஸ்டார். ரஜினிகாந்தின் 'வாய்ஸை' எதிர்பார்த்துக் காத்திருக்கும் ரசிகர்கள் போல, உங்கள் குரலுக்கும் அவ்வளவு மதிப்பிருக்கு. சரியான நேரத்தில் சரியான வேலைகளைத் திறமையா செய்து முடிங்க. பெயர், புகழ் கூடும். ஹோட்டல், உணவு, ரசாயனம், ஜவுளி, உலோகம் சம்பந்தப்பட்ட தொழில்கள் ஆதாயம் தரும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

## கன்னி

சினிமா நட்சத்திரங்கள் சேரச் சேர மேலும் ஒளிர ஆரம்பித்திருக்கும் பா.ஜ. கட்சி போல, உங்கள் மவுசும், மணிபர்ஸும் மிளிரப் போகுது. குறிப்பாக, வியாபாரிகள் செழிக்கப் போகிறார்கள். குரு பகவான், பன்னிரண்டில் சஞ்சாரம் என்பதால், குடும்பத்தில் சுப காரியங்களும் ஏற்படும். சுபச் செலவுகளும் கட்டுக்கடங்காமல் போகும். பெண்களுக்கு, தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும். அரசுப் பணியாளர்களுக்கு அனுகூலமான வாரம்.

## துலாம்

ராசிநாதன் சுக்ரன் 7ம் இடத்தில் தனி பலத்துடன் நிற்கிறார். கூடவே குரு பகவானின் செல்வாக்கும் திருப்தியாகவே இருப்பதால், சந்தோஷத் தொகுதியை நீங்கள் சுலபமாகக் கைப்பற்றி விடுவீர்கள்.

அது மட்டுமா...? மனைவியால்/கணவனால் மகிழ்ச்சி, மக்களால் குதூகலம், ஆரோக்கிய மேன்மை, சொத்து சேர்க்கை என டாப்டக்கர் விஷயங்களே நடக்கும். தெய்வ தரிசனம் நன்மையே தரும்.

### விருச்சிகம்

வாக்காளர் பட்டியலில் பெயர் விடுபட்டுப் போன, தீவிர வாக்காளப் பெருமகன் போல, இந்த வாரம் நீங்களும் கொஞ்சம் திகைச்சுப் போவீங்க! குறிப்பா, அலுவலகம், வியாபாரத்தில், சின்னதா நினைச்ச விஷயங்கள்கூட பெரிசா வந்து பயமுறுத்த வாய்ப்பு இருக்கு! சனி கிரக சாந்தி, தான தருமம் செய்து வந்தால், மலை போல் வந்த பிரச்னை, பனி போல நீங்கும். குடும்பஸ்தானத்தை குரு பகவான் பார்ப்பதால, புதிய சொத்து, வீடு வாங்கவும் வாய்ப்பிருக்கு.

**எழுத்தாளர் திருப்பூர் கிருஷ்ணனுக்கு (மிதுனம்) எடுத்த காரியத்தில் வெற்றி உண்டாம்!**



### தனுசு

வாக்காளர்களைக் கவர, நூதன பிரசாரம் செய்து வரும் அரசியல் பெருசுகள் போல, நீங்களும் புதிய யுக்திகள் மூலம் வியாபாரத்தை விரிவாக்குவீங்க. குறிப்பா, ஏற்றுமதி, இறக்குமதி விஷயத்தில் நல்ல லாபம் கிடைக்கும். குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். குரு பலமும் பூரணமாக இருப்பதால் ஒற்றுமை நிலவும். சுப மங்கள காரியங்கள் நிறைவேறும் பயணங்களில் கவனம் தேவை. நவக்கிரக சாந்தி செய்தால், பலன் உண்டு.

### மகரம்

இந்தியா முழுவதும் 'பக்' என்று பற்றிக்கொண்டிருக்கும் தேர்தல் ஜுரம் மாதிரி, அலுவலகத்தில் சுறுசுறுப்பு ஜுரம் தொற்றிக் கொள்ளும். அதன் பலனாக மேலதிகாரிகளின் பாராட்டு கிடைக்கும். உத்தியோக சம்பந்தமான பயணம் அனுகூலமாகும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி உண்டாகும். கொடுக்கல் - வாங்கல் அனுகூலம் தரும். வர வேண்டிய பணம் வசூல் ஆகும். கூட்டுத் தொழிலில் ஆதாயம் கூடும்.

### கும்பம்

பதினொரு ஆஸ்கார் விருதுகளை அள்ளிக் குவித்த, 'தி லார்டு ஆஃப் தி ரிங்க்ஸ்' படம் போல, நீங்களும், ஏகப்பட்ட பாராட்டுகளை அள்ளப் போறீங்க... குறிப்பா கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு சுபிட்சமான காலம் வரப் போகுது. குரு பகவான் 7ல் பலம் பெற்றுள்ளதால், குடும்பத்தில் சுபமங்கள காரியங்கள் யாவும் தாமதமின்றி நடைபெறும். நீண்ட நாள் தள்ளிப் போன குல தெய்வப் பிரார்த்தனை நிறைவேறும். பெண்களின் எண்ணங்கள் ஏற்றம் பெறும்.

### மீனம்

'அயோத்தி பிரச்னைக்கு மூன்று அம்சத் தீர்வு' என்ற முழங்கிக்கிட்டிருக்காங்க மூத்தவங்க! அதை விடுங்க... உங்களோட பொருளாதாரப் பிரச்னைக்கும் முத்தான தீர்வு இந்த வாரம் கிடைச்சுடும். எதிர்பார்த்த இடத்திலிருந்து பண உதவி வந்து சேரும். பிரபு தனவான்களின் ஆதரவு கிடைக்கும். அலைச்சல், தடைகள் யாவும் நீங்கி, உங்க வியாபாரம் தழைக்கும். அப்ப நீங்களும் பெருமையா சொல்லிக்கலாம் : பிஸினெஸ் ஒளிர்கிறது!

# விசித்தியாசம் தெரியாத மக்கள்!

**தற்போது அமெரிக்காவில் வசிக்கும் எழுத்தாளர் வாஸந்தியின் டயரிக்குறிப்புகள், 'கல்கி' ஆன்லைனில் இடம் பெற்று வருகின்றன. சென்ற வாரக் குறிப்புகள் இங்கே தொகுக்கப்பட்டுள்ளன.**

இப்போது அமெரிக்க மக்களின் நனவோடையில் அழிக்க முடியாத குறியீடாகிவிட்டது 9.11 என்பது. கிட்டத் தட்ட பத்து ஆண்டுகள் கழித்து அமெரிக்கா வந்திருக்கும் எனக்கும், அதன் தாக்கத்திலிருந்து தப்ப முடியாது என்று தோன்றுகிறது. தங்கள் நிழலைக் கண்டே அமெரிக்கர்கள் பயப்படுகிறார்கள்.

சென்னையிலிருந்து லாஸ் ஏஞ்ஜெலீஸ் வந்திறங்கியபோது, வெளிநாட்டுப் பயணிகளிடம் கெடுபிடி காண்பிக்காதது விநோதமென்றால், உள்நாட்டுப் பயணத்தில் அதைக் கறாராகக் காண்பிப்பது அதை விட விநோதம். லாஸ் ஏஞ்ஜெலீஸிலிருந்து நான் செல்ல வேண்டிய பீனிக்ஸுக்கு விமானமேறுவதற்குள் போது மடா சாமி என்று ஆகிவிட்டது. சோதனை மையத்தில் நின்றிருந்த காவலர்கள் கிங்கர பிலும் கையிலும் இருப்பதைப் போட. வாயே திறக்காமல் அணிந்திருக்கும் எல்லா நகைகளையும் கழற்றிக் கொடுத்துவிட வேண்டும். (தாலியெல்லாம் கழற்ற முடியாது என்று ஓர் அப்பாவி தமிழ்ப் பெண், சொல்லப்போக, அவரை சந்தேகத்துக்குரியவராக நினைத்து கேள்விமேல் கேள்வி கேட்டு நோகடித்ததில், அந்தப் பெண் கதிகலங்கிப் போனதாகக் கேள்வி.) கைப்பையில் இருப்பதை எல்லாம் தலை கீழாய் கொட்டிவிட்டு, வெளிநாட்டில் நமது ஆதாரங்களான பாஸ் போர்ட் இத்யாதிகளையும் சமர்ப்பித்துவிட்டு, பாதாதி கேசம் வரை நம்மை ஒரு பிரம்மாண்ட கறுப்பர் ஆராய இடமளித்துவிட்டு, 'மூவ் ஆன், மூவ் ஆன்' என்று அவர்கள் துரிதப்படுத்த, அவசரமாக கொட்டிக் கவிழ்த்த நகையையெல்லாம் எடுத்து அணிந்து (காரைக்குடி ஆச்சிகள் வந்தால் என்ன செய்வார்கள்?) விமானத்தில் ஏறி அமர்ந்தால், நம்மூர் விமானத்தில் கிடைக்கும் உபசரிப்பு இங்கு கிடைக்காது. ரொம்ப நேரம் கழித்து கொறிக்கக் கொஞ்சம் வேர்க்கடலை கிடைக்கும், ஒரு க்ளாஸ் கோக்குடன். எனக்கு நேர் எதிரில் அமர்ந்திருந்த



வர்க்கம். கையில் உறை அணிந்திருந்திருந்தார்கள், நமது சாமானும் நாமும் தீண்டத்தகாத வஸ்துக்களைப்போல. மேடையில் பல கூடைகள், நம் உடம்



இரண்டு ஏர் ஹோஸ்டெஸ்ஸுகள் ஓயாமல் பேசினார்கள். கையுடன் எடுத்து வந்திருந்த பெரிய ஹாம்பர்கர்களைச் சாப்பிட்டார்கள். 'வீட்டுக்குச் செல்லும்வரை பசியைப் பொறுத்துக் கொள்'' என்றான் என் மகன்.

# அமெரிக்க டயரிக் குறிப்பு

## அப்பாவி அமெரிக்கர்

அமெரிக்காவில் மனிதரிலிருந்து ஜடப்பொருள் வரை எதுவுமே சின்ன சைஸ் கிடையாது. பீனிக்ஸ் விமான நிலையம் பிரும்மாண்டம். ஜீவராசிகளும் டிட்டோ. அகலமான புன்னகை. தெரிந்தவர் தெரியாதவர் எல்லாருக்கும் 'ஹாவ் எ குட் டே!' வாழ்த்து. 'கெடுபிடிக்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லை' என்னும் பாவனை. 9.11க்குப் பிறகுதான் இந்த அவஸ்தை என்று மன்னிப்பு இழையோடும் பேச்சு.

எல்லாரையும் நம்பித்தான் மோசம் போனோம் என்கிற பதபதைப்பு, அமெரிக்கர்களை ஆட்டிப் படைக்கிறது. மற்றவர்களை அவர்கள் நம்பினார்கள் என்பதைவிட, அமெரிக்காவின் புஜ பல பராக்கிரமத்தை அவர்கள் அதிகம் நம்பினார்கள் என்பதில் சந்தேகமில்லை. சராசரி அமெரிக்கப் பிரஜையின் ஞான சூன்யம் அதிர்ச்சி தருவது. அத்தனை நவீன வசதிகள் கொண்ட வாழ்வின் சுபிட்சத்தில், யாரைப் பற்றியும் அறிந்து கொள்ளவோ, கவலைப் படவோ அவசியமில்லை, என்கிற இறுமாப்பு ரத்தத்தில் ஊறிப்போன ஒன்று. 2001ம் ஆண்டு 9.11 அன்று இரட்டை கோபுரங்கள் தாக்கப்பட்டபோது, அமெரிக்கர்களை அது உலுக்கிய உலுக்கல், அமெரிக்க விமான நிலையத்தில் பிளாஸ்டிக் கூடைகளில் விழும் பொருள்களில் இன்னமும் எதிரொலிக்கிறது.

'எங்களை ஏன் யாரும் வெறுக்க வேண்டும்?' என்று எல்லா சாமான்யர்களையும் திகைக்க வைத்த உலுக்கல் அல்லவா அது? அந்த உலுக்கலில், அமெரிக்க வாழ்வு தடம் புரண்டுதான் போய்விட்டது.

9.11 வெறுப்பின் அடையாளம் மட்டுமல்ல, உருவமற்ற எதிரியின் அடையாளம். எந்த எதிரியை எதிர்க்க, அமெரிக்கர்கள் தியாகங்கள் பலவற்றுக்குத் தயாராக வேண்டும். பயங்கரவாதத்திலிருந்து உலகத்தைக் காப்பாற்ற, அமெரிக்காவைத் தவிர வேறு யாரால் முடியும்? இப்படிப்பட்ட ஒரு குழப்பமான மன நிலையில்தான், ஈராக்குடன் போருக்குச் செல்ல வேண்டும் என்று அதிபர் புஷ் முரண்டு பிடித்த போது, ஓஸாமா பின் லேடனுக்கும், சதாம் ஹுசேனுக்கும் வித்தியாசம் தெரியாத மக்கள் பேசாமல் இருந்திருப்பார்கள் என்று நினைக்கிறேன்.

## கடைத் தெருவில் கண்ட தேவதை

பீனிக்ஸின் கடைத்தெருக்கள் மகா

வாஸந்தி

அமைதியாக இருக்கின்றன. இந்தியாவில் ஒரு சாலை விபத்தில் சமீபத்தில் காலில் அடிபட்டதிலிருந்து, எந்தச் சாலையையும் கடப்பது, எனக்கு சிம்ம சொப்பனமாகிப் போனது. பீனிக்ஸ் சாலைகளில் பிரும் மாண்ட வாகனங்களைப் பார்த்து, (பீனிக்ஸ் வாசிகளுக்கு கார்களின் அளவு, கௌரவத் தின் சின்னமாம்!) சாலை பயம் இங்கேயும் என்னைத் துரத்துகிறது. ஆனால் பீனிக்ஸ் வாசிகள் மிகப் பொறுமையாக, நான் செல் வதற்குக் காத்திருந்து வழி விடுகிறார்கள். சாலையை யார் கடந்தாலும், வண்டியை நிறுத்தி வழி விட வேண்டியது அவர்களது



கடமையாம். பாதசாரிகளுக்கு வழி விடாமல் போனால், அவர்கள் கைதாகலாம். ஜெயில் வாசம், அபராதத் தொகை செலுத்துதல் என்பதோடு, அவர்களது டிரைவிங் லைசென்சே ரத்தாகிவிடும். கார் ஓட்ட முடியாது என்றால், மிகப் பெரிய இழப்பு. நம்மூரில் செய்யும் தில்லுமுல்லெல் லாம் இங்கு எந்தக் கொம்பனும் செய்ய முடியாது. அதனாலேயே இங்கு சட்டங்கள் மதிக்கப்படுகின்றன. தவிர, ஒரு அடிப்படை மனித நேய உணர்வு அவர்களது வாழ்விய லில் ஊறிப்போனதாக, பல செயல்பாடு களில் சமூகக் கட்டமைப்பில் கண் கூடாகத் தெரிகிறது. (உதாரணத்திற்கு ஒவ்வொரு பார்க்கிங் இடத்திலும் உடல் ஊனமுற் றோருக்கு என்று இடம் ஒதுக்கப்படுகிறது. அதில் வேறு யாரேனும் வண்டியை நிறுத் தினால், 2000 டாலர் அபராதம் செலுத்த வேண்டும்.) அதனாலேயே சட்டங்களைக் கண்ணியமாகக் காப்பாற்றுவது இங்கு இயல்பாக நடப்பது.

ஆச்சரியமாக இருக்கிறது எனக்கு. கடமை, கண்ணியம் என்பதெல்லாம் வெறும் அரசியல் கோஷம் என்று எனக்கு நினைவு. ஒரு பிரும்மாண்ட கடைக்குள் வளைய வருவதற்குள், கால் சோர்ந்து வெளியில் வந்து அமர்ந்தேன். தேவதை போன்ற அழகுடன் ஒரு சிறுவன் வெளியில் நின்றிருந்தான். கையில் ஒரு சின்ன அட்டை. என்னைப் பார்த்து வெட்கச் சிரிப்புடன், 'ஒரு சங்கீத நிகழ்ச்சி மே மாதம் நடக்க இருப்பதாகவும், அதில் தான் பாடுவதாகவும் ஒரு டிக்கெட் வாங்குவீர்களானால் உங் களுக்குப் பரிசு கிடைக்கலாம்' என்றும் சொன்னான். அவன் சொன்ன விதத்தில் நான் சொக்கிப் போனேன்.

---

"நான் கொஞ்சம் சந்தோஷமா சிரிச்சிப் பேசினா என் மனைவிக்குப் பிடிக்காது!"

"என்ன செய்வாங்க?"

"உடனே எங்க கல்யாண ஆல்பத்தைக் கொண்டு வந்து பார்க்கச் சொல்லி அப்செட் பண்ணிடுவா!"

- சீத்தா தம்பி

---

அருகில் அவனுடைய தாய் புன்னகை யுடன் அமர்ந்திருந்தார். அது கிறித்துவ காயர் மியூஸிக் நிகழ்ச்சி. நூற்றி முப்பது பள்ளிச் சிறுவர்கள் கலந்து கொள்வதாகச் சொன்னார். ஒவ்வொரு மாணவனும் நூறு டிக்கெட் விற்க வேண்டும். என்னைப் போலவே பலர் அந்தச் சிறுவனின் அழகில் சொக்கியிருக்க வேண்டும். மேஜை மேல் இருந்த பெட்டியில், நிறைய டாலர் நோட்டுகள் இருந்தன.

நான் வீட்டுக்குக் கிளம்பும் சமயத்தில் இருட்டில் யாரோ பேசிக்கொண்டு போனார்கள் -

'சிறுவர்களை வைத்து சர்ச்சுகள் நடத்தும் பெரிய ஊழல் பித்தலாட்டம் இது!'

என்னால் நம்ப முடியவில்லை. அந்தப் பால்வடியும் உருவம், உபயோகப்படுத்தப் படுவதாக நினைக்க முடியவில்லை. தேனும் பாலும் ஓடும் அமெரிக்கா, பிரச்னைகள் அற்ற சொர்க்கபுரி இல்லை. அது விளங்கு வதற்குள் அமெரிக்கர்களுக்கு வயதாகிவிடு கிறது என்று நினைக்கிறேன்.

- தொடரும்

மறைந்த வெங்கடேச பண்ணையாருக்குத் திருச்செந்தூர் சுற்றுவட்டாரத்தில் ஆதரவு உண்டு. அகில இந்திய நாடார் பாதுகாப்புப் பேரவை என்ற அமைப்பை நடத்திக் கொண்டிருந்தார் அவர். அதே சமயம் அவரைப் பிடிக்காதவர்களும் உண்டு. பண்ணையார் மறைந்தவுடன், ஆளும் கட்சிக்கு எதிரான ஒரு நிலையை ராதிகா எடுக்க, இதைப் பயன்படுத்திக் கொண்டு வேட்பாளராக அவரை அறிவித்திருக்கிறது, தி.மு.க. அனுதாப அலை அடிக்கும் என்பது எதிர்பார்ப்பு.

இது குறித்து ஆலடி அருணாவுக்கு மட்டுமல்ல, பல அடிமட்டத் தொண்டர்களுக்கும் நிறைய அதிருப்தி.

ராதிகாவுக்குப் பூர்வீகம் திருச்செந்தூர் பக்கம் என்றாலும், அவர் பிறந்தது, படித்தது எல்லாம் சென்னையில்தான். இப்போது நிறைமாத கர்ப்பிணியாக இருக்கும் ராதிகாவுக்கு மார்ச் இறுதியில் குழந்தை பிறக்கும் என்று டாக்டர் சொல்லியிருக்கிறாராம்! எனவே ராதிகாவின் நேரடிப் பிரசாரம் ஏப்ரல் பதினைந்து தேதிக்குப் பிறகு தான். அது வரை...?

கேபிள் தொலைக் காட்சியிலும், நடமாடும் தொலைக்காட்சி வண்டிகளிலும் ராதிகா, சி.டி, காஸெட்கள் வழியே வோட்டு கேட்கப் போகிறார்!

"வெற்றிக் கனியை அம்மா மடியில் சமர்ப்பிப்பேன். இல்லையேல் அப்படியே வங்காள விரிகுடாவில் விழுந்து விடுவேன்" என்று சபதம் செய்து, ஆளும்கட்சி சார்பாகத் தேர்தல் வேலையில் இறங்கியிருக்கிறார் அமைச்சர் அனிதா ராதாகிருஷ்ணன். இவரும் பண்ணையாருக்கு வேண்டியவர்தான்! பண்ணையாரை சாத்தான்குளம் இடைத் தேர்தலில் ஆளும் கட்சிக்கு ஆதரவாகப் பயன்படுத்தியவர். பண்ணையார் துரதிர்ஷ்டவசமாக 'என்கௌன்டரில்' இறந்தபோது, அமைச்சரின் பெயரும் பரபரப்பாக செய்திகளில் அடிபட்டது. அனிதா ராதாகிருஷ்ணனின் அதிரடிப் பிரசாரமும், பண்ணையார் சிஷ்யர்களின் மோதலும் திருச்செந்தூர் கடலோர கிராமங்களில் புயலைக் கிளப்ப இருக்கின்றன.

இதற்கிடையில் "இனி பத்திரிகைகளுக்குப் பேட்டி கொடுக்க வேண்டாம்" என்று ராதிகாவுக்கு வாய்ப்பூட்டுப் போட்டிருக்கிறது தி.மு.க தலைமை!

"உங்கள் கணவரை 'ரௌடி' என்று சில பத்திரிகைகள் எழுதுகின்றனவே" என்று கேட்டோம். பேட்டியே வேண்டாம் என்று மறுத்தவர், "நீங்கள் சொல்லும் பத்திரிகைகளை நான் படிப்பதே இல்லையே" என்றார்.




• ராதிகா

• பண்ணையார்



"ஜெயித்தால் தொகுதிக்கு என்ன செய்வதாக உத்தேசம்?"

"நிறையச் செய்யலாங்க. கிராமச் சாலைகள் படு மோசம். அந்தச் சாலைகளைப் போடலாம். தொழிற்பூங்கா கொண்டு வந்து வேலை வாய்ப்புகளை உருவாக்கலாம்" என்றார் ராதிகா.

- ப்ரியன்

படம்: மீடியா ராமு

# “ஜனநாயகம் ஜெயிக்க வேண்டும்!



மக்களவைத் தேர்தலுக்காக அரசியல் கட்சிகள் புதிய வேட்பாளர்களைக் களத்தில் இறக்கியிருக்கின்றன. ‘அனுபவம் இல்லாத இந்தப் புதுமுகங்களால் மக்களவையில் சிறப்பாகச் செயல்பட முடியுமா?’ என்று மூத்த ‘பார்லிமென்டேரியன்’ இரா. செழியனிடம் கேட்டோம்.

“மக்கள் நலனில் அக்கறை உள்ளவர்கள், மக்களுடன் நேரிடையாகத் தொடர்பு கொண்டவர்கள், அரசின் திட்டங்கள் மட்டுமின்றி, புதிய திட்டங்கள் பற்றிச் சிந்திப்பவர்கள்தான் மக்களவைக்குச் செல்ல வேண்டும். இதில் அரசியலுக்குப் புதியவர்கள் என்றால், அவசியம் பயிற்சி வேண்டும். நான் முதன்முதலில் மக்களவைக்குச் சென்றபோது வகுப்புகள் நடத்துவார்கள். பட்ஜெட், நிதிநிலை அறிக்கைகளின் மீது கேள்வி கேட்பது எப்படி? என்பது உட்பட, பல்வேறு விஷயங்கள் பற்றி சொல்லித் தந்தார்கள். பெரிய சிரமம் இல்லையென்றாலும் டெக்னிக்கலாக சில விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். இப்போது அப்படி இருக்கிறதா தெரியவில்லை. இது அவசியம்.

“பொதுவாக சட்டசபை, மக்களவை உறுப்பினர்கள், மக்களுக்காக, மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறவர்கள். அவர்களது தேவைக்காகச் சட்ட திட்டங்களைத் தயாரிப்பதும், கொடுக்கப்பட்ட நிதியும், அதிகாரங்களும் சரியான முறையில் பயன்படுத்தப்படுகிறதா என்பதை ஆராய்வதும் அவர்கள் பணி. ஆனால் தேர்ந்தெடுக்கப்படும் மக்கள் பிரதிநிதிகளில் எத்தனை பேர் இதை ஒழுங்காகச் செய்கிறார்கள் என்பது, கேள்விக்குறியாக இருக்கிறது.

1967ம் ஆண்டுக்கு முன் கட்சிக்குள் தலைவர்கள் இருந்தார்கள். அதற்குப் பிறகு தலைவர்களுக்காகக் கட்சி என்றாகிவிட்டது. அப்போதெல்லாம் சட்டசபை, மக்களை

வையில் ஆரோக்கியமான விவாதங்கள் நடக்கும். அப்போதைய உறுப்பினர்கள் சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொண்டவர்கள். அதனால் அவர்களிடம் மக்கள் சேவையும், மக்களுக்கான நல்ல எண்ணங்களும் மேலோங்கி இருந்தன. ஐந்து மணிக்கு ஓர் அறிக்கை மீதான விவாதம் என்றால், 4.55 மணிக்கு, முன்னாள் பிரதமர் நேரு, அவையில் இருப்பார். மூன்று, நான்கு தலைமுறை மாற்றம் வந்து விட்டது. இப்போது மக்களவையில் பட்ஜெட் வாசிப்புக் கூட்டத்தில், வெறும் பத்து உறுப்பினர்கள் மட்டுமே இருப்பதற்கு என்ன காரணம்? அவர்களிடம் மக்களுக்குச் சேவை செய்வதற்கான உணர்வு மங்கிப் போய்விட்டதா?

**இப்போது ஏழைகளுக்கான இந்தியா வளர்ந்து கொண்டே போகிறது. வறுமையின் வளர்ச்சி நகரத்தில் அதிகமாகப் பாய்ந்திருக்கிறது. இது ஆபத்தானது.**



* படங்கள்: ஸ்ரீஹரி



"மக்களவை உறுப்பினர்களுக்குத் தொகுதி நிதி கொடுக்கிறார்கள். இதை ஆரம்பத்திலேயே எதிர்த்தவன் நான். மக்களவையில் போடப்பட்ட திட்டத்தைதான் அரசு நிறைவேற்ற வேண்டும். ஆனால் மக்களவை உறுப்பினர்களை நிர்வாகச் செயல்பாடுகளில் ஈடுபடுத்தக் கூடாது. இவர்களை யார் கண்காணிப்பது? எம்.பி. தொகுதி நிதியில் ஏற்பட்ட சட்ட விரோத செயல்பாடுகளை இந்திய தலைமை தணிக்கைக் குழு இரண்டு அறிக்கைகளாக அளித்தது. பல கோடி ரூபாய் மோசடி செய்யப்பட்டதாகக் கூறப்பட்டிருக்கிற அந்த அறிக்கைப் பற்றி இன்னும் ஆராயவில்லை. இது பற்றி நான் எழுதியிருந்த கட்டுரைகளின் அடிப்படையில் வழக்குத் தொடர்ந்திருக்கிறேன்.

"எல்லா அரசியல் கட்சிகளினுடைய நோக்கமும் ஆட்சியைப் பிடிப்பதுதான். பிறகு அதைத் தக்க வைப்பது. இந்த ஆசையினால் வாக்குறுதிகளை அள்ளி வீசுகிறார்கள். அதில் எதையாவது நிறைவேற்றியிருக்கிறார்களா என்று வாக்களிக்கும் மக்கள்தான் பார்க்க வேண்டும். நிறைவேற்றவில்லையென்றால், தட்டிக் கேட்க வேண்டும்.

"ஐந்து வருடங்களுக்கொருமுறைதான் ஜனநாயக உணர்வு வருகிறது, அரசியல் தலைவர்களுக்கும், மக்களுக்கும். மக்கள் நடத்துகிற மக்களாட்சியில் மக்களுக்கு ஈடுபாடு குறைந்திருக்கிறது. மக்களவை இருக்கிற டில்லியில், கடந்த தேர்தலின்போது வாக்குப்பதிவு 47% சதவிகிதம். இதை எங்கே போய்ச் சொல்வது? ஒவ்வொரு தேர்தலிலும் யார் ஜெயிக்கிறார்களோ இல்லையோ, ஜனநாயகம் ஜெயிக்க வேண்டும். அதற்கு ஒவ்வொரு வாக்காளரும் வாக்களிக்க வேண்டும்!

"இப்போது ஏழைகளுக்கான இந்தியா வளர்ந்து கொண்டே போகிறது. வறுமையின் வளர்ச்சி நகரத்தில் அதிகமாகப் பாய்ந்திருக்கிறது. இது ஆபத்தானது. நகரத்தின் வசதிகள் கிராமத்துக்கும் வந்தால்தான், இந்த ஆபத்தைத் தடுக்க முடியும். அரசியல் தலைவர்களும், மக்கள் பிரதிநிதிகளும் இதில் கவனம் செலுத்த வேண்டியது அவசியம்."

- ஏக்நாத்

கன்யாகுமரியில் சூரியோதய அழகை ரசித்த படி நின்று கொண்டிருந்தேன்.

"ஆஹா! இந்தியா எப்படி ஒளிர்கிறது!" என்று என்னை அறியாமல் சொல்லி மகிழ்ந்தேன்.

"அச்சா!" என்ற ஆமோதிப்புடன் முதுகில் ஒரு பலமான ஷொட்டு.

திரும்பினால் அத்வானிஜி!

"உதயசூரியனைப் பார்த்தபோதும் 'இந்தியா ஒளிர்கிறது' ஞாபகம்தான் வருகிறது இல்லியா..." என்று பிரகாசித்தார்.

"என்னங்க, இப்படி அநியாயம் பண்ணிட்டீங்க... ஹரியானாவுல காங்கிரஸுக்கு வோட்டுப் போடுங்கன்னு பேசிட்டீங்களே..."

"திரிக்காதே! அப்படியா சொன்னேன்? பி.ஜே.பிக்குப் போடுங்க; பி.ஜே.பியைப் பிடிக்க வேண்ணா காங்கிரஸுக்குப் போடுங்க; உதிரிகளுக்குப் போடாதீங்கன்னேன்!"



* அத்வானி



* ஆலடி அருணா

# செய்திகள், திரிப்பது

"உதிரிகளுக்குப் போட்டா, காங்கிரஸ் வோட்டுப் பிரிய, பி.ஜே.பிக்குத்தானே லாபம்?"

"பி.ஜே.பி. வோட்டு பிரிஞ்சு, காங்கிரஸுக்கு லாபமாயிட்டா என்ன செய்யறது?"

"என்னதான் இருந்தாலும் 'காங்கிரஸுக்கு வோட்டுப் போடுங்க'ன்னு உங்க வாயிலேர்ந்து வந்திருக்கக் கூடாதுங்க... தேர்தல் கமிஷனுக்கு நன்றி சொல்லிட்டீங்களா?"

"எதுக்கு?"

"துணைப் பிரதமரானாலும் தேர்தல் பிரசாரத்துக்கு அரசாங்க விமானம் பயன்படுத்தக் கூடாதுன்னு தடை விதிச்சதுக்கு... அப்படி அவங்க தடை விதிச்சிருக்கலேன்னா இந்தச் சொகுசு பஸ் பயண அனுபவம் கிடைச்சிருக்குமா? அதுவும் கறை படிந்த ஜூதேவ் தயாரிச்சுக் கொடுத்த பள பளா பஸ்! படுக்கை அறை என்ன! வரவேற்பு அறை என்ன! குளியல் அறை என்ன! டீவி என்ன, வீஸிடி சினிமா என்ன... மஜாதான் போங்க..."

"அடடே! ரொம்ப ஆசையைக் கிளப்பிட்டே... உடனே போய் பஸ்ஸில் ஏறி, யாத்திரையை ஆரம்பிக்கிறேன்" என்று நடையைக் கட்டினார் அத்வானி.

"ஹலோ! ஆலடி அருணா? கங்கிராட்ஸ்!"

"தாங்க்யூ!"

"சோனியா அயல்நாட்டுப் பேர்வழின்னு திடீர்னு எப்படிங்க கண்டுபிடிச்சீங்க...?"

"ஏய்! என்ன, கிண்டலா?"

"அடடா! அப்படியெல்லாம் இல்லை சுவாமி! அமெரிக்காவிலிருந்து கூட உங்களுக்கு அழைப்பு வரப் போகுதுன்னு கேள்வி! புஷ், ஜெர்ரி ரெண்டு பேருமாகச் சேர்ந்து..."

"அப்படியா!" என்று பரபரப்பானார் அருணா.

"அங்கே ஆர்னால்ட் ஸ்வாஸ்நேகர்னு வாயில நுழையாத பெயருடன் ஒரு அயல்நாட்டுப் பேர்வழி, இப்ப கலிஃபோர்னியா கவர்னர் ஆயிட்டாரு. அமெரிக்காவில் வந்து குடியேறிய அயல்நாட்டவர் ஏன் ஜனாதிபதியாகக் கூடாது? அதற்குத் தடை விதிக்கும் சட்டத்தை மாற்றணும்னு ஆரம்பிச்சிருக்காரு. அவருக்கு அங்க பாபுலர் சப்போர்ட்! சினிமா ஸ்டார் ஆச்சே! அதனால அதை பிரேக் பண்ண உங்களைத்

• யாத்ரா பஸ்ஸுக்குத் தேங்காய் உடைப்பு தான் நம்பி இருக்காங்களாம்!"

அவரைக் கனவு காணச் செய்துவிட்டு, சோனியா மக்களைச் சந்தித்துக் கொண்டிருந்த ஏதோ ஒரு குக்கிராமத்தைத் தேடிப் போய்ச் சேர்ந்தேன்.

மக்களோடு மக்களாக நானும் கை நீட்ட, ''என்னப்பா, எங்க இவ்வளவு தூரம்'' என்றார் சோனியா.

'''எனக்குப் பிரதமர் பதவி மேல ஆசை இல்லை'ன்னு சொன்னாலும் சொன்னீங்க. அதை எப்படி திரிச்சுட்டாங்க பார்த்தீங்களா? யுத்தம் ஆரம்பிக்கிறதுக்கு முன்னாடியே நீங்க புறமுதுகிட்டு ஓடறீங்களாம்!"

"ஆமாமாம்! 'நான்தான் பிரதமர்'னு சொன்னா, 'அயல்நாட்டுக்காரி'ன்னு முத்திரைக் குத்துவாங்க; 'தேர்தலுக்குப் பிறகு கூட்டணி கட்சியினர் பிரதமரைத் தேர்ந்தெடுப்பாங்க'ன்னு சொன்னா, 'பிரதமரே யாருன்னு தெரியாத கூட்டணி'ம்பாங்க. 'பிரதமர் பதவில ஆசை இல்லை'ன்னா, 'யுத்த களத்தை விட்டு பயந்து ஓடுறா'ம்பாங்க... எப்படிப் போனாலும் வம்புதான்'' என்று பெருமூச்சு விட்டார் சோனியா..... "எனக்குத் தனிநபர் தாக்குதல் தெரியாது; பிடிக்காது. வருண்காந்தியைக்கூட அரசியலுக்கு வரவேற்றுப் பேசினவ, நான்."

செம்பியன்

''சினிமா நட்சத்திரங்களைக் கூட்டணிக்குள் வளைச்சுப் போடவும் தெரியாது..."

"நேற்று வரை காங்கிரஸில் குளிர் காய்ந்துவிட்டு, இன்று எதிர்க்கட்சி பக்கம் தாவறவங்களைத் தடுக்கவும் தெரியாது..."

"இதெல்லாம் தெரியாட்டா போகட்டும்; உ.பி.யில முலாயம்சிங் யாதவை சரிக்கட்டி சேர்த்துக்கவாவது தெரிஞ்சுக்குங்க. அந்த மாநிலம்தான் ரொம்ப முக்கியம்" என்று கூறி விடைபெற்று, இல. கணேசனுக்கு ஃபோன் போட்டேன்.

"அத்வானி ஜி யாத்திரை கிளம்பிட்டார், நான் ரொம்ப பிஸி; சீக்கிரம் சொல்லு" என்றார்.

"காங்கிரஸ் நாற்பது வருஷத்துல சாதிக்காததை பி.ஜே.பி ஐந்து வருஷ ஆட்சியில் சாதித்ததாகப் பிரசாரம் பண்றீங்க..."

"ஆமா, அதுல என்ன தப்பு?"

"கல்யாணச் சமையல் நடக்கிறதை பார்த்திருக்கீங்களா? முதல்நாள் ராத்திரிலேர்ந்து மறுநாள் சமையலுக்குக் காய்கறி நறுக்குவதில் ஆரம்பிப்பாங்க. இரவு ரெண்டு மணி நேரம் தூங்கினாலே ஜாஸ்தி... பத்தரை மணி வரை வெந்து புழுங்கி சமையல் நடக்கும். அப்புறம் பந்தி இலை போட்டா, பன்னிரண்டு மணிக்குள் அண்டா, குண்டா எல்லாமே காலி!"

"அது மாதிரி...?"

"காங்கிரஸ் கஷ்டப்பட்டுச் சமைச்சு வைச்சதை நீங்க மளமளன்னு எடுத்துப் பரிமாறி (கஜானா) காலி பண்ணிட்டீங்க'ன்னு எதிர்க்கட்சிக்காரங்க சொல்லலாமில்லியா? அதிலும் அருண் ஷோரி அவசரம் அவசரமா அரசு நிறுவனங்களை ஏலம் போடுகிற வேகத்தைப் பார்த்தா..."

"யோவ்! எதிர் தரப்பு வாதங்களைத் தவிடு பொடியாக்க கருணாநிதிக்கே நல்லாத் தெரியும்; நீ வேற உலக்கையைத் தூக்கிட்டு ஓடி வர வேண்டாம்'' என்று கோபமாகக் கூறிய கணேசன், செல்லை அணைப்பதற்கு முன், யாத்ரா பஸ்ஸின் ஹாரன் ஒலி அதன் வழியே கூர்மையாக என் காதில் பாய்ந்தது!



# குறையொன்றுமில்லை

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

பிரஹலாதனைப் படுகுழியிலே தள்ளினான் ஹிரண்யகசிபு.

*'விறகடுக்கி, ஆழக் குழிவெட்டி, ஆங்கனயே தீமூட்டி...'*

திக்குழியில் தள்ளி விடுகிறான். நெருப்பிலே பிடித்துத் தள்ளி விடுகிறதைப் பார்க்கிறபோது, ஹிரண்ய கசிபுவுக்குக் கண்ணிலே தாரை தாரையாக ஜலம் வருகிறது...!

"புகை அடிக்கிறாற் போலிருக்கிறது... கொஞ்சம் தூரம் போய் நில்லுங்களேன்" என்கிறான் ஒருவன் வந்து!

"புகையினால் இல்லை... குழந்தையை அக்னியிலே தள்ளினேனே, அந்தப் புத்திர சோகம் என்னைப் பிடித்து உலுக்குகிறது" என்றான் ஹிரண்யன்.

யக்ஞம் பண்ணுகிற எஜமானரை அக்னியானது ரக்ஷிக்க வேண்டும். எப்படி ரக்ஷிக்க வேண்டும் என்று கேட்டால், 'ஒரு தந்தை தன் தனயனை எப்படி ரக்ஷிப்பானோ, ஒரு தந்தைக்குத் தனயனுடைய முன்னேற்றத்தில் எப்படி சந்தோஷம் ஏற்படுமோ, அந்த மாதிரி நீ ரக்ஷிக்க வேண்டும்' என்பது பிரார்த்தனை.

ஹிரண்ய கசிபு துஷ்டனாக இருந்தாலும், குழந்தையைத் தள்ளுகிறபோது அவனால் தாள முடியவில்லை.

உள்ளே, அக்னிக்குள்ளே போன குழந்தை, 'தாதா!' என்று கூப்பிடுகிறது! 'தாதா' என்றால் சம்ஸ்கிருதத்திலே அப்பா என்று அர்த்தம். "அப்பா! எனக்கு அப்பா கிடைத்த மாதிரி, இந்த உலகத்திலே யாருக்குக் கிடைப்பார்! இவ்வளவு அழகான படுக்கை. ஆயிரம் தாமரை மலர்களால் அடுக்கப்பட்ட படுக்கை... ஜில்லென்று காற்று அடிக்கிறது. இங்கே! சந்தனக் குழம்புக்குள்ளே கையை விட்ட மாதிரி ஜிலுஜிலுவென்று இருக்கிறது... அப்பா! உனக்கு இதிலே ஏதாவது சந்தேகமாயிருந்தால், நீ கொஞ்சம் உள்ளே வா!" என்கிறது அந்தக் குழந்தை.

எங்கேயோ நின்று கொண்டிருக்கிறான் ஹிரண்ய கசிபு. கிட்டே நெருங்க முடியவில்லை. குழந்தையானால் உள்ளேயிருந்து எழுந்து வெளியே வருகிறது! அப்போது பரமாத்மா அந்தக் குழந்தையை ரக்ஷிக்கவில்லையா?

சர்ப்பங்களையெல்லாம் விட்டுக் கடிக்கச் சொன்னான் ஹிரண்யன். எல்லா சர்ப்பங்களும் கிட்டே வருகின்றன... அப்போது கருட பகவானை உபாஸித்தான் பிரஹலாதன். கருட மந்திரம் சொல்கிறான். அப்படி கருட மந்திரத்தைச் சொன்னால், விஷ ஜந்துக்கள் கிட்டே வருமோ! அந்த சர்ப்பங்களுக்கெல்லாம் பிரஹலாதனைப் பார்த்தாலே கருடன் மாதிரி இருக்கிறது! கிட்டே போகவே முடியவில்லை!

ஹிரண்ய கசிபுவானால் பாம்புகளைப் பயமுறுத்துகிறான். சில பாம்புகள் முன்னே போய்க் கடித்தன. கடித்ததும் அதன் பற்கள் மொத்தம் பொடிப் பொடியாகக் கீழே விழுந்துவிட்டன. தலையிலே இருக்கிற மாணிக்கக் கல் சிதறிப் பேர்ந்து கீழே விழுந்து விட்டது. அது படமெடுத்தால், ஒரே நடுக்கம்! நடுங்கிப் போய் ஹிரண்ய கசிபுவிடம் வந்து "பிரபோ! உங்கள் பிள்ளையைக் கடிப்பதைத் தவிர வேறு எதையாவது சொல்லுங்கள், இதைப் பண்ண மாட்டோம்" என்கின்றன பாம்புகள்!

எட்டு திக்கணங்களையும் விட்டுத் துகைக்கச் சொன்னான் பிரஹலாதனை. அப்போது பகவான் சிம்ஹ பாவனை பாவித்திருந்தார். பிரஹலாதனே சிம்ஹமாகக் காட்சி அளித்தான். திக்கணங்கள் போய் தந்தங்களால் அவனைப் புடைத்த

# அருள்வாக்கு

ஏழைக்கு அன்னதானமோ பொருள் உதவியோ செய்யும்போது இரண்டு பக்கத்திலும் உண்மையான சந்தோஷமும், பிரியமுமே நிரம்பியிருந்தன. இப்போது பார்ட்டி நடத்தும்போது அங்கே உண்மையான பிரியம் இல்லாததோடு, துவேஷம் வேறு உண்டாகிறது. வசதியிருப்பவர்கள் பார்ட்டி நடத்துவதைப் பார்த்து, வசதியில்லாதவர்களுக்கு வேறுபாடும் துவேஷமும் உண்டாகின்றன. உறவு முறைகளில் ஏழை பணக்காரர் என்று வித்தியாசம் பாராட்டக் கூடாது என்பதற்காக இவ்வளவு சொன்னேன்.

'வசதியுள்ளவர்களால்தான் பண உதவி செய்து புண்ணியம் செய்ய முடியும். நாம் என்ன செய்யலாம்?' என்று மற்றவர்கள் எண்ணக் கூடாது. சரீரத்தால் மற்றவர்களுக்குக் கைங்கரியம் செய்வது, பெரிய புண்ணியம். அது சித்த சுத்திக்கு ரொம்ப ரொம்ப உதவும். வசதியே இல்லாதவர்களும் இவ் விதத்தில் பிறருக்கு சரீர சகாயம் செய்ய முடியும்.

ஒவ்வொருத்தரும் - பிறருக்குக்கூடத் தெரிய வேண்டாம் - ஏதோ ஓர் ஒற்றையடிப் பாதைக்குப் போய் அங்கே உள்ள முள்ளை,

போது, அந்த தந்தங்களே முறிந்து விழுந்தன. அப்போது பிரஹலாதனை பகவான் ரக்ஷிக்கவில்லையா?

ஒரு சைலத்தினுடைய அக்ர பாகத்துக்கு (மலையினுடைய உச்சிக்கு) அழைத்துப் போய், அங்கேயிருந்து கீழே பிடித்துத் தள்ளிவிட்டார்கள், யம படர்களைப் போன்ற கிங்கரர்கள். அந்தக் குழந்தை கீழே விழுந்து கொண்டேயிருக்கிறது. அப்படி விழுந்து கொண்டேயிருக்கிறபோதுகூட, அதற்கு தான் கீழே விழுந்து சின்னா பின்னமாகிச் சிதறிப் போய் விடுவோம் என்கிற பயமே ஏற்படவில்லை. நமக்கு உள்ளுக்குள்ளே அந்தர்யாமியாக பகவான் உட்கார்ந்திருக்கிறானே! அவனுக்கு அடி பட்டுவிடப் போகிறதே! என்று இரண்டு கைகளாலேயும் தன் ஹ்ருதயத்தை கெட்டியாகப் பிடித்துக் கொண்டே விழுகிறதாம் அந்தக் குழந்தை!

அப்போது பூமாதா பார்த்தாள்... நம் பர்த்தாவை இந்தக் குழந்தை இவ்வளவு ஜாக்கிரதையாக ரக்ஷிக்கிறதே... இந்தக் குழந்தையை நாம் ரக்ஷிக்க வேண்டாமா! என்று பூமாதா அப்படியே குழந்தையைக் கையிலே ஏந்திக் கொண்டு, மெள்ள கீழே விட்டாள். அது கிரி பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டு நேரே அதன் அப்பாவிடம் போய் நின்றது!

"அப்பா, நான் வந்துவிட்டேன்..." என்றது. பிடித்துத் தள்ளியவர்கள் திரும்பி வருவதற்கு முன்னால் குழந்தை வந்து நிற்கிறது!

நடுங்கிப் போய்விட்டான் அவன்! தன் பத்னி கயாதுவை அழைத்தான். அழைத்து, கார்க்கோடக சர்ப்பத்தின் விஷத்தை அந்தக் குழந்தைக்குக் கொடுக்கச் சொன்னான்.

எந்தத் தாயாராவது குழந்தைக்கு விஷத்தைக் கொடுப்பாளா...? அதுவும் கார்க்கோடக சர்ப்பத்தின் விஷம்!

நாமக்கல் என்ற நரஸிம்ஹ க்ஷேத்திரத்திலே பகவானுக்குக் கார்க்கோடக சயனம். பகவான் ரங்கநாதன் கார்க்கோடக சர்ப்பத்தின் மேல் படுத்துக் கொண்டிருக்கிறான்; ஆதிசேஷனின் மேல் அல்ல. ஏனென்றால், அந்த ஊரில் கார்க்கோடகன் தபஸ் பண்ண, பகவான் அவனை என்ன வேண்டுமென்று கேட்டான். 'ஆதிசேஷன் மேல் படுத்துக் கொண்டிருக்கிற மாதிரி, என் மேலேயும் நீ படுத்துக் கொள்ள வேண்டும்' என்று கேட்டுக் கொண்டது அது. ஆகவே அங்கே கார்க்கோடக சயனம்.

இந்தப் பாம்பு வரும் வழி மொத்தம் கன்னங்கரேலென்று இருக்கும். அது வந்த வழியிலே காற்றுப் பட்டு, அந்தக் காற்றை நாம் சுவாசித்தால்கூட பிராணன் போய் விடும். அவ்வளவு மகா விஷம் நிரம்பிய கார்க்கோடக சர்ப்பத்தின் விஷத்தைக் கொடு, என்று கயாதுவைக் கூப்பிட்டுச் சொல்கிறான் ஹிரண்ய கசிபு.

அவள் நடுங்குகிறாள். அந்தக் குழந்தை சொல்கிறது: 'அம்மா! நீ ஏன் பயப்படுகிறாய்? பர்த்தாவினுடைய ஆக்ஞையை நீ பரிபாலனம் பண்ணு...' என்கிறது.

"அனுகூலனாக சர்வேச்வரன் ஜகன்னாதன் என்னுள்ளே இருக்கிறபோது, நான் ஏன் பயப்பட வேண்டும்? விஷமே இருக்கட்டுமே... எதற்காக பயப்பட வேண்டும்?" என்று பிரஹலாதன் கேட்கிறான்.

ஸ்வாமி தேசிகன் சுதர்ஷனாஷ்டகத்துக்குப் பலச்ருதி சொல்கிறபோது சொல்கிறார்:



கண்ணாடியை அப்புறப்படுத்தி வந்தால் போதும். அது சித்த சுத்திக்குப் பெரிய உதவி, இது மாதிரி சின்ன தர்மங்களை எவரும் செய்யலாம். பணக்காரர், ஏழை என்ற வித்தியாசமில்லாமல் ஒரு பேட்டையில் உள்ள அனைவரும் சேர்ந்து குளம் வெட்டலாம்.

'ஈசுவர அனுக்கிரகம் வேண்டும். வேண்டும்' என்றால் அது எப்படி வரும்? பரோபகாரமான, ஜீவகாருண்யமான நல்ல காரியங்களைச் செய்து செய்து, மனசு பக்குவப்பட்டால்தான், சித்த சுத்தி உண்டாகி, அந்த சுத்தமான சித்தத்தில் ஈசுவரனின் உருவத்தைப் பார்க்க முடியும். கலங்கின ஜலத்தில் பிம்பம் தெரியாதது போல், நாம் மனசைக் கலக்கிக் கொண்டு ஈசுவர ஸ்வரூபம் தெரியாதபடி செய்து கொண்டிருக்கிறோம். பகவத் பக்தியோடு பரோபகாரமும் செய்து, மனசு தெளிவாகும்போது ஈசுவரானுக்கிரகத்தை நாம் கிரகித்துக் கொள்ள முடியும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

'விஷமே இருக்கட்டுமே... சுதர்ஷனாஷ்டகத்தைச் சொன்னால் விஷம் என்ன பண்ணும்?'' என்கிறார்.

அந்த மாதிரி, பிரஹலாதன் சொல்கிறான்:

*'அனுகூலே ஜகன்னாதே விஷம்*
*ஸ்யாது மமலைஷ்வருதே*
*அனுகூலே ஜகன்னாதே விஷம்பத்யம்*
*பவே மம:'*

- அந்த விஷமே எனக்குப் பத்தியமாக இருக்கட்டும் என்று சொல்லி, 'நாராயணா!' என்று சொல்லிக் கொண்டே விஷத்தைச் சாப்பிட்டு விட்டது குழந்தை.

நாமாம்ருதத்தாலே அந்தக் குழந்தையைக் காத்தான் பகவான். விஷமும் பத்தியமாக ஜீரணமாகிவிட்டது குழந்தைக்கு.

நடுங்கிப் போய்விட்டான் ஹிரண்யன். அவனால் ஒன்றும் பண்ணமுடியவில்லை.

சம்பராஸுரனுடைய மாயையைப் பிரயோகம் பண்ணி, உக்கிரமான காற்றைக் குழந்தையின் உடம்பு மேலே செலுத்தி, அதன் உடலையே வற்றச் செய்ய வேண்டும் என்று பார்க்கிறான்... முடியவில்லை!

பெரிய கல்லைக் குழந்தையின் உடம்பில் கட்டி, சமுத்திரத்திலே விட வேண்டும் என்று பார்க்கிறான், அதுவும் முடியவில்லை!

அப்போதெல்லாம் பரமாத்மா வந்து பிரஹலாதனை ரக்ஷிக்கவில்லையா?

ஆகவே பகவான் நரசிம்ஹனாக ஆவிர்ப்பவித்தது என்பது பிரஹலாதனை ரக்ஷிப்பதற்காக அல்ல. எத்தனையோ சந்தர்ப்பத்திலே நேரிலே தோன்றாமலேயே ரக்ஷித்தவன், கடைசியில் நேரில் நரசிம்ஹமாகத் தோன்றியது எதற்காக...? அந்தப் பிரஹலாதனின் வார்த்தையைக் காப்பதற்காகவேயன்றி வேறில்லை.

குழந்தை சொன்னதைக் காட்ட வேண்டும் என்பதற்காக, எல்லா இடத்திலும் அவனே நீக்கமற நிறைந்தான். ஒரு ஸ்தம்பத்திலேயிருந்து தான் வந்தான் என்றாலும், உலகம் முழுவதும் நிறைந்திருந்தான் அவன்! ஆகவே, உலகம் முழுவதும் யாரைத் தன்னுள்ளே வைத்துக் கொண்டிருக்கிறது என்று கேட்டால், நரசிம்ஹனைத்தான். உலகமே நரசிம்ஹ கர்ப்பம். எங்கு தட்டினாலும் அவன் வருவான்! தூணிலிருந்துதான் வந்தான். ஆனால் எங்கு தட்டினாலும் அங்கிருந்து வருவதற்குச் சித்தமாக அவன் காத்திருந்தான்.

இப்போதும்கூட அவன் அப்படித்தான் நிறைந்திருக்கிறான் என்கிறார் சுவாமி தேசிகன்.

பிரஹலாதன் வார்த்தையைக் காப்பாற்றுவதற்காக மட்டுமல்ல... இன்னொருத்தரின் வாக்கைக் காப்பதற்காகவும், இவ்வாறு எங்கும் நிறைந்து நின்றான் பரமாத்மா...

(வளரும்)

ஆஹா!

# ரூ.50,000 பரிசு!

## கல்கி வழங்கும் கலக்கல் குவிஸ் போட்டி



இது தேர்தல் குவிஸ் 2வது போட்டி. பரிசுத் தொகை ரூ. 50,000/- சந்தோஷமா பங்கெடுத்துக்கங்க!

● எல்லாக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதும் வாசகருக்கு ரூ.50,000/- பரிசு! ● நிறையப்பேர் சரியான விடைகளை எழுதியிருந்தால், பரிசு குலுக்கல் முறையில்தான். ● ஆறுதல் பரிசு 50 பேருக்குத் தலா ரூ. 100/- ● முதல் பரிசுத் தொகை வருமான வரி விதிமுறைகளுக்கு உட்பட்டது. ● உறையின் மேல் 'ஆஹா! ரூ.50,000' என்று கண்டிப்பாகக் குறிப்பிட வேண்டும். ● போட்டி தொடர்பாக விசாரணைக்கு அனுமதியில்லை. ● ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது. ● முடிவு தேதி ஐந்தாவது கூப்பனுடன் குறிப்பிடப்படும்.

### தேர்தல் குவிஸ் போட்டி கூப்பன் - 2

1. நமது தேசிய மலரைச் சின்னமாகக் கொண்ட கட்சி ..............................
2. தேர்தல் கமிஷன் அறிவித்துள்ள, பாராளுமன்றத் தேர்தல் நடக்கும் தேதிகள் ....................................
3. 2004 தேர்தலுக்காக பா.ஜ.க தொடங்கும் ரதயாத்திரை (பாரத் உதய் யாத்ரா) முடியும் இடம் ....................................
4. ஜார்ஜ் பெர்னாண்டஸ் தலைவராக இருக்கும் கட்சியின் பெயர் ....................................
5. துணைப் பிரதமர் அத்வானி போட்டியிடும் தொகுதி ....................................
6. .................................... யின் தேர்தல் பிரசாரத்துக்காக, மத்திய அரசு ராணுவ விமானம் கேட்டது.

பெயர் : ..............................................................

முகவரி : ..............................................................

..............................................................

..............................................................

கையொப்பம் : ..............................................................

